# சுதேசமித்திரன்

21 - 11 - 43
Vol XIV No 42

## வாரப்பதிப்பு

PRICE 3 ANNAS



THE SWADESAMITRAN ILLUSTRATED WEEKLY






IMPORTANT TO MOTHERS
Nº 99
WOODWARDS CELEBRATED
"GRIPE WATER"
AN
INFANTS PRESERVATIVE
FOR THE DISORDERS OF CHILDREN, VIZ.
REGISTERED TRADE MARK "GRIPE WATER" Nº

சுதேசமித்திரன்

வாரப்பதிப்பு

சுபானு௵ கார்த்திகைமீ 6௳ (21-11-'43)

# லெபனன் அமளி

ஜனநாயக உணர்ச்சியை அடக்கியொடுக்குவது அச்சுக் கும்பலின் ஒரு தனிக்கலையென்று சொல்வதுண்டு. ஆனால் அந்த வித்தையில் அவர்களைவிடத் தங்களுக்குத் தேர்ச்சி அதிகமென சுதந்திர பிரஞ்சுக் கமிட்டி நிரூபித்து விட்டது. லெபனன் பிரதேசத்தில் சென்ற ஒருவாரமாக ஒரே அமளி. அது மத்திய தரைக்கடலின் கிழக்குக் கரையில் ஸிரியாவையொட்டிய பிரதேசம்; சுதந்திர பிரஞ்சுக்கமிட்டியின் ஆதிக்கத்திற்குட்பட்டது. அங்கு ஸ்தல மக்களுக்குச் சிறிதளவு அதிகாரமுள்ள அரசியல் ஒன்று இயங்கி வருகிறது. திடீரென்று அதன் தலைவரையும், மந்திரிகளையும் சுதந்திர பிரஞ்சுக்கமிட்டியினர் கைது செய்து விட்டனர். ஜனங்களிலும் ஏராளமானவர் சிறையிலடைக்கப்பட்டு விட்டார்கள். அது மட்டுமா? நாடெங்கும் ராணுவச் சட்ட அமுல். தெருக்களிலெல்லாம் பிரஞ்சுத் துருப்புகளும், அக்கமிட்டியின் அதிகாரத்திற்குட்பட்ட ஸெனிகலிய ஜாதித் துருப்புகளும் டாங்கிகள், இயந்திர பீரங்கிகள் முதலிய கோர ஆயுதங்களுடன் நடமாடுகின்றன. அச்சுத் துருப்புகளின் மீது பிரயோகமாகவேண்டிய அத்தளவாடங்களுக்கு இன்று லெபனன் மக்களே இரையாகி வருகின்றனர்கள். அவர்கள் மீது பிரஞ்சுக் கமிட்டிக்கு ஏன் இவ்வளவு கோபம்? சுதேச ஜனங்களின் கருத்துக்கொத்த முறையில் அரசியலைத் திருத்தியமைக்குமாறு அந்த ஜனப்பிரதிநிதிகள் கேட்கத் துணிந்தது தான். பிரதிநிதி சபையில் அக்கோரிக்கைக்குச் சாதக




மாக வாக்களித்த எல்லா அங்கத்தினர்களும் ஜெயிலில் அடைக்கப்பட்டு விட்டார்கள்.

லெபனன் சர்வதேசச்சங்க மாண்டேட்படி பிரான்ஸிடம் ஒப்படைக்கப்பட்ட நாடுகளில் ஒன்று. மூன்று வருஷங்களுக்குள் அதற்கும், ஸிரியாவுக்கும் சுதந்திரமளிப்பதாக 1936-ம் ஆண்டிலேயே பிரஞ்சு சர்க்கார் வாக்களித்திருந்தனர். அதை நிறைவேற்றாதது கண்டு அப்பிரதேசங்களில், அப்போது முதலே கிளர்ச்சி வலுக்கலாயிற்று. 1940-ல் பிரான்ஸ் வீழ்ந்ததன் பேரில் அக்கிளர்ச்சி இன்னும் தீவிரமாகியது. மறு வருஷம் ஆங்கிலோ-பிரஞ்சுத் துருப்புகள் லெபனனையும், ஸிரியாவையும் ஆக்கிரமித்துக் கொண்டபோது, அப்பிரதேசங்களுக்குப் பரிபூரண சுதந்திரமளிப்பதாகப் பிரஞ்சுக் கமிட்டி உறுதிமொழியளித்தது; மாண்டேட் ஆட்சி அத்துடன் ஒழிந்து விட்டதாகவும் பிரகடனம் செய்தது. பிறகு வருஷம் இரண்டாகியும் அதை நிறைவேற்றி வைக்க அக்கமிட்டி உருவான நடவடிக்கை எதுவும் எடுத்துக் கொள்ளவில்லை. இந்நிலையில் அதைச் சுட்டிக் காட்டி, தங்கள் கோரிக்கையை லெபனன் பிரதிநிதிகள் வற்புறுத்தியதில் தவறென்ன? இதற்கு அடக்கு முறைப் பிரயோகம் தான் பிரஞ்சுக் கமிட்டியின் பதில்.

இந்நிலையில் பிரிட்டிஷ் சர்க்கார் என்ன செய்யப் போகின்றனர்? 1941-ல் பிரஞ்சுக் கமிட்டி லெபனனுக்கு கொடுத்த வாக்குறுதியை பிரிட்டனும் பகிரங்கமாக உறுதிப்படுத்தியிருக்கிறது. எனவே, அந் நாட்டுக்கு இவ்விஷயத்தில் நேரடியான பொறுப்புண்டு. அதைத் தவிர, தற்போதைய யுத்தத்தில் மத்தியக் கிழக்கின் முக்கியத்தை விவரிக்கத் தேவையில்லை. எகிப்து, அரேபியா, இராக் போன்ற நாடுகளெல்லாம் பிரஞ்சுக் கமிட்டியின் அக்கிரமம் கண்டு கொதித்தெழுந்திருக்கின்றன. ஏகாதிபத்திய வெறியால் மூளை குழம்பிப்போன அக் கமிட்டியை பிரிட்டன்

—அடுத்த பக்கம்

# சென்ற வார நிகழ்ச்சிகள்

## கோர ரயில் விபத்து

அய்யலூரில் சம்பவித்த செங்கோட்டைப் பாஸஞ்சர் ரயில் விபத்தைப்பற்றிய நினைவு மறந்து போவதற்குள்ளாகத் தென்னிந்தியாவில் சென்ற ஞாயிற்றுக்கிழமையன்று மற்றொரு அகோர ரயில் விபத்தேற்பட்டு விட்டது. சென்னைக்கு வந்துகொண்டிருந்த நெ 2. இந்தோ ஸிலோன் எக்ஸ்பிரஸ் சேர்ந்தனூருக்கும்-விழுப்புரத்துக்குமிடையே விபத்துக்காளாகியது. இவ்விபத்தில் பலியானவர் தொகை 39; 88 பேர் ஆஸ்பத்திரி சிகிச்சைக்கு அனுப்பப்பட்டனராம். என்ஜினை அடுத்திருந்த ஏழு வண்டிகள் பாதையை விட்டிறங்கி விட்டனவென தென்னிந்திய ரயில்வே ஏஜண்டின் அறிக்கை கூறியது. முதன் முதலாகவிருந்த 6 வண்டிகள் தவிடுபொடியாகி விட்டதாக நமது நிருபர் கொடுத்த தகவல். காயமுற்றவர்களுக்குச் செய்ய வேண்டிய முதல் சிகிச்சை வசதிகளையெல்லாம் கவனித்த பின் அவர்களை ஆஸ்பத்திரியில் சேர்ப்பதற்கான ஏற்பாடுகளும் நடைபெற்றனவாம். ரயில்வே வைத்திய, போலீஸ் அதிகாரிகள் ஸ்தலத்துக்குச் சென்று வேண்டிய உதவிகளைப் புரிந்தனர். ஒவ்வொரு ரயில்வே விபத்துக்கு பிறகும் வழக்கம் போல் செய்யப்படும் விசாரணையும் ஆரம்பமாகிவிட்டதாம். ரயில்வேக்களின் பிரதம இன்ஸ்பெக்டரின் இறுதியான விசாரணை கூடிய விரைவில் ஆரம்பமாகுமாம். விபத்தில் சிக்கி மரணமடைந்தவர்களில் பெரும்பான்மையோர் என்ஜினுக்குப் பக்கத்திலிருந்த 2, 3, 4, வது வண்டிகளில் பிரயாணம் செய்தவர்கள் என்றும் தெரிவிக்கப்பட்டது. விபத்தின் காரணம் இன்னதெனத் தெரியவில்லை. அதை ரயில்வேக்களின் இன்ஸ்பெக்டர் விசாரிப்பார். ஆனால் இது நாசவேலையாகவிருக்குமோ என்ற சந்தேகத்துக்கிடமில்லையென்று மட்டும் சொல்லலாமென அவ்வறிக்கை கூறுகிறது.

* * * * *



சேர்ந்தனூருக்கும்—விழுப்புரத்துக்குமிடையே விபத்துக்குள்ளாகிய இந்தோ-ஸிலோன் எக்ஸ்பிரஸில் சில வண்டிகள் சிதறுண்டு போயின.

(முன் பக்கத் தொடர்ச்சி)

உடனே மண்டையில் தட்டி லெபனன் மக்களுக்கு அவர்களது பிறப்புரிமை கிடைக்கச் செய்யவேண்டும். இந்தியா போன்ற நாடுகளில் பிரிட்டிஷார் கையாளும் முறை மட்டும் ஒழுங்கானதோ என்று பிரஞ்சுக் கமிட்டி திருப்பிக் கேட்கவும் அவர்கள் இடம் வைத்துக் கொள்ளக் கூடாது.

---

## சென்னைமீது 2-ம் முறை எதிரி விமானம்

சென்ற 11-ந் தேதி இரவு 2-ம் முறையாக ஒரு மாதத்திற்கு முன் செய்தது போல, எதிரிகள் சென்னை மீது குண்டு வீச முயன்றனர். இது முற்றிலும் வீணாயிற்று. அபாயச் சங்குகள் முழங்கின. ஆனால் அதைக் கேட்டு விழித்தவர்கள் நிர்மலமான ஆகாயத்தில் ஒன்றுமே காணாததால், அபாய நீக்கச் சங்கொலிப்பதைக்கூட எதிர்பாராமல் உறங்கச் சென்றனர். இந்தியா கூட்டு யுத்த அறிக்கை அறிவிப்பதாவது:—

12-ந் தேதி காலை எதிரி விமானங்கள் ஸிலோனுக்கும் சென்னைப் பகுதிக்கும் வந்தன. ஒரு விமானம் நாசப்படுத்தப்பட்டது; மற்றொன்று சேதமடைந்தது. வெடிகுண்டு வீசப்படவில்லை.

* * * *

## சட்ட சபையில் காங்கிரஸ் வெற்றி

சமீபத்தில் நடந்த இந்தியா சட்டசபையில சர்க்காரைக் கண்டிப்பதற்காக, "இந்தியாவின் யுத்த முயற்சியைப்பற்றி பிரிட்டனில் பேசுவதற்காக தங்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட உத்தியோகப்பற்றற்றவரை அனுப்புவதென்ற" விவேகமற்ற முடிவை யொட்டி ஸ்ரீ கோவிந்த தேஷ்முக்

(32-ம் பக்கம்)

# போர் போகும் போக்கு

## ரஷ்யர் முன்னேற்றம்

ரஷ்யத்துருப்புகள் உக்ரேனில் கீவுக்கு மேற்கே 80 மைல் தூரத்திலுள்ள ஸிடோமிர் என்ற முக்கியமான ரயில்வே ஜங்ஷனைக்கைப்பற்றி விட்டன. அது லெனின்கிராட்—ஓடிஸா ரயில்பாதையிலிருக்கிறது. எனவே அது வடக்கே நெவல் பகுதியிலும் துண்டிக்கப்பட்டு விட்டது. போலந்து எல்லைக்குக் கிழக்கே எதிரிகள் தங்கள் துருப்புகளை வடக்கிலிருந்து தெற்கேயும், தெற்கிலிருந்து வடக்கேயும் கொண்டு போக இந்த ஒரு ரயில் பாதையே அவர்கள் வசமிருந்தன. இப்போது அதுவும் துண்டிக்கப்பட்டு விட்டது.

கீவிலிருந்து போலிஷ் எல்லை வரை போகும் ஒரு முக்கிய ரஸ்தா ஸிடோமிர் வழியாகவே செல்கிறது. இப்போது ரஷ்யத் துருப்புகளுக்கும் போலிஷ் எல்லைக்கும் சுமார் 60 மைல்தான். எதிரிகள் தென் அரங்கத்தில் அடுத்தபடியாக பக் நதியை ஒரு அரணாகக் கொண்டு எதிர்த்து நிற்க எண்ணியிருக்கலாம். ஆனால் நதிகள் ரஷ்யருக்குக் கடக்க முடியாத ஒரு தடையாக இருந்த காலம் மலையேறிவிட்டது. நீபர் நதி வளைவில் ரஷ்யத் துருப்புகள் ஒரு பெரிய தாக்குதல் துவக்கியிருக்கின்றன. சில இடங்களில் அவர்கள் தங்கள் அரணை ஊடுருவிவிட்டதாக ஜெர்மன் அதிகாரிகளே ஒப்புக் கொள்ளுகின்றனர். ஸ்மலன்ஸ்குக்கு மேற்கேயும் சோவியத் தாக்குதல் மீண்டும் ஆரம்பமாகிவிட்டது.

## லீராஸ் தீவில் ஜெர்மனியர்

டொடிகானீஸ் தீவுகளின் வட கோடியில் இருப்பது லீராஸ் தீவாகும். சில இடங்களில் எதிரி உள்ளே புகுந்து விட்டதாகவும், அவர்களது படகுகள் சில நாசமாக்கப்பட்டதாகவும், இத்தாலியத் துருப்புகள் பிரிட்டிஷ் துருப்புகளுடன் சேர்ந்து போர் புரிவதாகவும் அறிவிக்கப்படுகிறது. ஸெப்டம்பர் 21-ம் தேதி பிரிட்டிஷார் இதையும் காஸ், ஸமாஸ் தீவுகளையும் ஆக்ரமித்துக் கொண்டனர். அக்டோபர் மாதம் 3-ம் தேதி சுமார் 2000 ஜெர்மன் பாரசூட் படையினர் காஸ் தீவில் இறங்கியதால், சற்று போர் நடந்தது. மூன்று வாரங்களுக்கப்புறம் பிரிட்டிஷ் துருப்புகள் வாபீஸாயின.

## போகன் வில்லியில் நேசப்படை முன்னேற்றம்

ஸாலமன் தீவுகளில் ஒன்றான போகன்வில் தீவில் எம்பிரஸ் அகஸ்தா வளைகுடாவிலிருந்து உள்நாட்டில் முன்னேறுவதில் ஜெனரல் மக் ஆர்தரின் படைகள் சில அனுகூலங்களைப் பெற்றன என்று நேசதேச தலைமைக் காரியாலய அறிக்கை கூறுகிறது. வளைகுடாவின் வடகோடியிலுள்ள பிவா கிராமத்தை அவை பிடித்துக் கொண்டன. இந்த கிராமத்துக்காக உக்ரமான சண்டை நடந்தது. போர்க்களத்தில் 600-ஜப்பானியர் கொல்லப்பட்டனர்.

## ஜப்பானியர் கூற்றுக்கு நாக்ஸ் மறுப்பு

பசிபிக்கில் ஒரு அமெரிக்க கடற்படையை பூரணமாக நாசஞ் செய்துவிட்டதாக ஜப்பானியர் கூறுவதை பத்திரிகா நிருபர்கள் கூட்டத்தில் யு. எஸ். கடற்படை மந்திரியான கர்னல் நாக்ஸ் பலமாக மறுத்தார். இந்த வதந்திகள் சற்றும் நம்பத்தகாதவை என்றும் பரிகசிக்கத் தக்கபடி இவை மிக்க விசித்திரமானவையாக இருக்கின்றனவென்றும், நவம்பர் 2-ந் தேதிக்குப் பிறகு பஸிபிக்கில் பெரிய கடற்போரே நடக்கவில்லை என்றும் உள்நாட்டு நெருக்கடியைச் சமாளிப்பதற்காக எதிரிகள் இத்தகைய, முற்றிலும் பொய்யான தகவலைக் கொடுப்பதாகவும் கூறினார்.

## பர்ல் ஹார்பர் மீது ஜாப் தாக்குதல்?

பஸிபிக்கில் யுனைடெட் ஸ்டேட்ஸின் மிகப் பெரிய கடற்படை தளமான பர்ல் ஹார்பர்மீது இன்னும் நாலைந்து மாதங்களில் ஜப்பானியர் ஒரு தாக்குதலை ஆரம்பிக்கக் கூடும் என்று மத்திய பஸிப்பிக்கில் ஹவாய் பிரதேசத்திலுள்ள யுனைடெட் ஸ்டேட்ஸின் தளபதியான ஜெனரல் ராபர்ட் ரிச்சர்ட்ஸன் கூறினார்.

## ஐக்கிய நாடுகள் நிவாரண மகாநாடு

அமெரிக்காவிலுள்ள அட்லான்டா நகரில் கூடும் ஐக்கிய நாடுகள் நிவாரண புனருத்தாரண மகாநாட்டில் இந்திய பஞ்ச நிலைபற்றி விவாதிக்கப் படமாட்டாது என்று அதிகார பூர்வமாக தெரியவருகிறது.

## நிவாரண நிதி

ஐக்கிய நாட்டு நிவாரண புனருத்தாரண நிர்வாகத்தின் நிதிக்கு யுனைடெட் ஸ்டேட்ஸ் சர்க்கார் 150 கோடி டாலர் கொடுக்க உத்தேசித்திருக்கிறது. இதர நாடுகளும், தங்கள் தங்கள் வருமானத்துக் கேற்றாற் போல பணம் கொடுக்கும் என்று பொதுவாக நம்பப்படுகிறது. ஆனால் மெம்பர் நாடுகள் நிதி கொடுப்பது ஒரு திட்டமான வரம்புப்படி இராது. உதாரணமாக இந்தியாவின் வருமானம் ரொம்ப அதிகம். ஆனால் அங்குள்ள ஒவ்வொரு நபருக்கும் கிடைப்பது மிகக் கொஞ்சமே. எனவே, இதற்கு ஏதாவது ஏற்பாடு செய்யப்படும் ஒரு மெம்பர் நாடு திட்டப்படி கொடுக்கவில்லை என்பதற்காக அது தண்டிக்கப்பட மாட்டாது.

# கண்டதும் கேட்டதும்



'நீலம்'

## ஸ்ரீ டி. ஆர். மகாலிங்கம்

அற்புதமான முறையில் அனுபவித்துப் பாடினாலும், சரி, அல்லது வாத்தியங்களிலே வாசித்தாலும் சரி மயிர் சிலிர்த்துவிடும். இது இயற்கை. உண்மையான சங்கீதத்திலுள்ள விசேஷம் அது. அந்த சந்தர்ப்பங்களில் வித்வான்களும் தங்களை மெய்மறந்து பாடியிருக்க வேண்டும். அப்போதுதான் அவ்வுணர்ச்சி ரஸிகர்களிடையே பிரதி பலிக்கும். சென்ற 13-ந்தேதி இரவு ஸ்ரீமான் டி. ஆர். மஹாலிங்கத்தின் வேணுகானம் சென்னை ரேடியோவில் 1½ மணிநேரம் நடைபெற்றது. அந்த 1½ மணி நேரமும் ஓடியசோடே தெரியாமல் செய்து விட்டது அவரது வாசிப்பு. புஷ்பங்களை உதிர்ப்பது போன்ற பிர்க்காக்களும் அழகழகான பிடிகளும் அவரது வேணுகான அலைகளில் நிரம்பிப்பொங்கின. ஹரிகாம்போஜி ராக ஆலாபனையும் அதில் அநேகருக்கு மறந்து போயிருக்ககூடிய "ஸனிதோடி" கீர்த்தனையும் வெகு உருக்கமாய் விழுந்தன. கன்னடகௌள ராகத்தில் " ஓரஜூபு " என்ற கீர்த்தனை ரொம்பச் சிறியதுதான். ஆனால் அதிலுள்ள மிடுக்கும், மெருகும் தனி அழகு வாய்ந்தவை. ஸ்ரீ மகாலிங்கம் அப்பாட்டை எடுத்த மாதிரியும் முடித்த முறையும் அதன் அமைப்புக்கே ஒரு அலாதியான சோபையை ஊட்டியதெனலாம். பைரவி ராக ஆலாபனைக்குப் பிறகு "கொலுவையுன்னாடே" கீர்த்தனை. அதை அடுத்து கம்பீரமான முறையில் ஸஹானாராக ஆலாபனை; அதில் ஸ்ரீ ஸதாசிவப்ருமத்தின் "நாமரஸம் பிபரே" கீர்த்தனை. ஸ்ரீ மகாலிங்கம் கச்சேரிக்கு அதிக சோபையைஊட்டியதுபக்கவாத்தியமாகவாசித்த ஸ்ரீகோவிந்தஸ்வாமிநாயக்கரது பிடில். ஸ்ரீமாலி வாசிப்புக்கு அனுசரணையாகவும், அடக்கமாகவும், அழகு குன்றாமலும் அவர் ஒவ்வொரு ராகத்தையும்,—சிற்சில இடங்களில் கற்பனையோடு—அன்று வாசித்தார். ஸ்ரீ நாயகரின் ஒத்துழைப்பு இக்கச்சேரிக்குக் கிட்டியதைபோல் வேறுஎதற்குமே கிட்டவில்லை யென்றுகூடச் சொல்லிவிடலாம். அவ்வளவுசிறப்பாக விளங்கியது அவரதுவாசிப்பு. ஸ்ரீ மாலி மத்தியமாவதியை முதல் ராகமாக கொண்டு ஸ்வர பேதம்செய்து மோஹனம், சுத்த ஸாவேரி, ஹிந்தோளம், இவற்றையும் ஸிந்துபைரவி, பேஹாக், தோடி ஆகியராகங்களையும்ராக மாலிகையாக வாசித்தார். அவற்றில் மிக்க உயர்தரமாக விளங்கியவை ஸிந்துபைரவியும், பேஹாக்கும்.

## ஸ்ரீமதி தனம் சகோதரிகள்

ரேடியோக் கச்சேரிகளில் நல்ல பாட்டாக இருந்தால் அலுப்புச் சலிப்பில்லாமல் எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் கேட்கத் தூண்டும். சம்பிரதாயத்தை நழுவ விடாமல் நல்ல பாணியுடன்கூடிய பாட்டாக அமைந்துவிட்டாலோ மிக விசேஷம்தான். சென்ற 12-ந்தேதியன்று திருச்சி நிலையத்தில் இரவு 7-45-மணி முதல் 8-15 வரையில் ஸ்ரீமதி தனம் சகோதரிகள் பாடினர். அவர்கள் பாடிய உருப்படிகள் சொற்பந்தான். காம்போஜியில் "சிக்கல் மேவிய தேவ தேவ சிங்கார வேலவா" என்ற பாட்டை ஸ்ரீமதி தனம்மாள் வெகு உருக்கமாகவும், மெருகுடனும் பாடினார். அவர் ஸ்வரம் பாடும் முறையை மிக்க உயர்வெனச்சொல்ல வேண்டும். மேல் ஸ்தாயி வரை படிப்படியாகவும் அதே சமயத்தில் விருவிருப்புடனும் ஸ்வரங்களைப் பிரயோகித்தார். மிகவும் உயர்தரமான பாணி படிந்துள்ள இவரது பாட்டைத் துண்டு படுத்திப் போடாமல் தொடர்ச்சியாகப் பாடச்செய்திருந்தால் தரமாயிருந்திருக்கும். ஹரிகாம்போஜியில் "ராம நன்னுப்ரோவரா" கீர்த்தனையையும் வராளியிலே "நேபோகடகுண்டே" கீர்த்தனையையும் சுவை குன்றாமல் ச்ருதியுடன் அவர்கள் லயித்துப் பாடினர்.




# ஒழிவு நேர உல்லாஸ வேலை



*ஸ்ரீமதி லக்ஷ்மிக்கு எழுதிய இரண்டாவது கடிதம் இது. இதுவும் ஜெனரல் ஆஸ்பத்திரியிலிருந்து 1941-ம் வருஷம் மே மாதம் 30-ந் தேதியன்று எழுதப்பட்டது. ஒழிவு நேர உல்லாஸ வேலை என்பது குறித்து ஸ்ரீ ஸத்தியமூர்த்தி தமது குமாரிக்கு அக்கடிதத்தில் விவரங்கள் கூறியிருக்கிறார்: —*

## 2

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

ஒழிவு நேரத்தில் பொழுது போக்குக்காகச் செய்யக்கூடிய வேலையொன்றைப்பற்றி உனக்குச் சொல்லப்போகிறேன். நீ உனக்கென்று ஒழிவு நேர உல்லாஸ வேலையாக ஒன்றை அபிவிருத்தி செய்துகொள்ள வேண்டுமென்பது என் எண்ணம். அதை உன் வாழ்நாளெல்லாம் அனுஷ்டித்து வரவேண்டும். இதனால் உன் வாழ்க்கை சந்தோஷகரமாக விருக்கும்; ருசிகரமாயுமிருக்கும். ஒழிவுநேர உல்லாஸ வேலை என்றால் என்ன? அகராதியிலுள்ள வியாக்யானத்தை நான் சொல்லவில்லை. ஒழிந்த நேரத்தில் பொழுது போக்குக்காகச் செய்யும் வேலையைச் சாதாரணமாக கீழ்க்கண்டவாறு சொல்லலாம். ஏதாவது ஓரு வேலை; அதை ஜீவனத்துக்காகச் செய்வதில்லை; கடமையை உத்தேசித்துச் செய்வதுமல்ல. சந்துஷ்டிக்காகச் செய்யும் வேலை அது. நீ பொறுக்கிக் கொள்ளும் வேலை எதுவாகவிருந்தாலும் அது சாதாரணமாக உன்னுடைய அலுவல்களுக்குப் புறம்பட்டதாகவிருக்கவேண்டும். புத்தகங்கள் என்றால் உனக்கு ரொம்பப் பிடிக்குமென்று எனக்குத் தெரியும். ஆனால் அது உன்னுடைய ஒழிவு நேர உல்லாஸவேலையாக இருக்க முடியாது. படிப்பு என்பது உன்னுடைய சாதாரண வேலைகளில் ஒன்று. வேண்டுமானால் இப்படிக்கூட நான் சொல்லுவேன். ஓய்வு நேர உல்லாஸ வேலைக்கும் உன்னுடைய சாதாரண அலுவல்களுக்கும் சம்பந்தமே இருக்கக்கூடாது.

ஆனால் நீ பொழுது போக்குக்காகப் பொறுக்கிக் கொள்ளக்கூடிய வேலை எப்படியிருக்கவேண்டுமென்று தெரியுமா? அது உனக்குப் பிடித்த வேலையாகவிருக்கவேண்டும்; அதை விருத்தி செய்வதில் உண்மையான உற்சாகம் இருக்கவேண்டும்; அவ்வேலையிலிருந்து உண்மையாகவும், நிரந்தரமாகவும் சந்தோஷம் கிட்டும்படியும் இருக்கவேண்டும்.

நான் இதுபற்றிச் சற்று யோசித்தேன். உனக்குத் தோட்ட வேலை பொழுதுபோக்கு வேலையாக இருக்கலாமென்பது என் யோசனை. அது உனக்குப் பிடிக்கிறதா? அந்த வேலையை உனக்குப் பிடித்தமானதாகச் செய்து கொள்வாய் என்று நம்புகிறேன். தோட்ட வேலையில் சந்தோஷமளிக்கும்படி அலாதியான அம்சமொன்றிருக்கிறது. கஷ்டப்பட்டு வேலை செய்து தன்னுடைய வேலையினால் ஏற்படக்கூடிய பலன்களைச் செடிகள், புஷ்பங்கள், பழங்கள் ஆகியவற்றின் ரூபங்களில் காண்பது சந்தோஷகரமாகும். இதனால் உனக்கு மட்டுமில்லாமல் அவற்றை பார்க்கும் அனைவருக்கும் சந்தோஷம். எனவே இவ்வேலை வாழ்க்கையில் மிகவும் பெரிய அனுபவமாகும்.

வழக்கப்படி செய்ய வேண்டிய வேலைகளையெல்லாம் தோட்டக்காரர்கள் செய்து விடுவர். ஆனால் இந்த வேலையில் நாளாவட்டத்தில் நீயே பங்கெடுத்துக்கொள்வாய். அதுவே உன்னைப் பற்றிக் கொள்ளும். தோட்டத்தைப் பயிர் செய்வது; பருவக்காலங்களைப் பரிசீலனைசெய்து அறிவது; செடி கொடிகளுக்கு எதிரியாகவுள்ள பூச்சிப்புழுக்களுடன் எதிர்த்துப் போராடுவது; தோட்டத்துக்

குச்செவ்வனே ஜலம் பாய்ச்சி, எருவிடுவது; வர்ணவாரியாக தோட்டத்தை அமைக்கும் திட்டம்; அதை உன் வீட்டுக்குப் பொருத்தமாக அமைப்பது முதலிய இக்காரியங்கள் பற்றியெல்லாம் நீ சிந்திக்கும்படி நேரும். ரஸிக உணர்ச்சியையும் பிரயோகிக்க நேரிடும்.

சென்னைபோன்ற இடங்களில் தோட்டவேலை ரொம்ப கஷ்டமாகும். ஆனால் அதிருஷ்டவசமாக உனக்கு நல்ல இடமாகக்கிடைக்கும் பட்சத்தில் அவ்வேலை மிகவும் சுலபமாகவிருக்கும். சென்னையில்கூட நீ நல்ல தோட்டத்தைப் பயிராக்கி உருப்படுத்தமுடியும். உன்னுடைய தோட்டம் நன்ருகவிருக்கிறது. கொஞ்சங் கொஞ்சமாக அது சிறந்து விளங்கும்.

தோட்டவேலை உனக்குத் தேகப்பயிற்சி அளிக்கிறது; நிறைய நல்ல காற்று கிடைக்கிறது. விடியற்காலையில் எழுந்திருக்கச் செய்கிறது. இது நல்லது. தோட்டவேலை செய்வதால் அழகான பறவைகளை நீ காணலாம். அவை எவ்வாறு நடக்கின்றன என்பதையும் நீ அறியலாம். இதைத் தவிர தேனீ வளர்க்க ஆரம்பித்தால் அவற்றின் அற்புதமான பழக்கவழக்கங்களை நீ கற்றுக்கொள்ளலாம். அதோடு நல்ல தேனும் உனக்குக் கிடைக்கும். அது மிகச் சிறந்த ஆகாரம்.

காய்கறிகள், புஷ்பங்கள், பழங்கள் இவற்றைக் கொடுக்கக்கூடிய தோட்டத்தைப் பயிர் செய்ய முடியும். ஓரளவு நீயும் இதைச் செய்யலாம். ஆனால் ஒழிவு நேர உல்லாஸவேலை என்ற முறையில் உனக்குத் தோட்டவேலையைக் குறித்து இதை நான் எழுதுகிறேன். முக்கியமாகப் புஷ்பங்கள் பற்றி எழுதும்போது அவற்றை நாம் செடிகளிலிருந்தும் கொடிகளிலிருந்தும் பறிப்பது சரியா? புஷ்பங்களைப் பறிக்காமல் அவற்றைச் செடி கொடிகளிலேயே விட்டுவைத்தால் நமது தோட்டம் சோபையுடன் சிறந்து விளங்குமல்லவா? அவற்றைப் பார்த்து, அவற்றின் தோற்றத்தையும், மணத்தையும் அனுபவிக்கலாமல்லவா? அது ஆச்சர்யமானதுதான். சகுந்தலை துஷ்யந்த மகாராஜாவின் தர்பாருக்குச்செல்லுகிருள். அந்த சமயத்தில் தமது காட்டில் வளர்ந்த தோட்டத்திலே உள்ள நறுமலர்களையும், பசுங்கொடிகளையும் நோக்கிப் பின்வருமாறு சொல்லுகிருர் கண்வ மஹரிஷி:—

"உங்களுக்கெல்லாம் ஜலம் விடுவதற்கு முன்னுல் சகுந்தலை ஜலபானம் பண்ணமாட்டாள்; நிறைய பூச்சூடிக் கொள்வதென்ருல் அவளுக்குப் பரம ஆசை; ஆனுல் அதற்காக இளந்தளிர்களையோ, நறுமலர்களையோ ஒரு போதும் பறிக்கமாட்டாள்; அவள் இப்போது தன் புருஷன் வீட்டுக்குப் போகிருள்...நீங்களெல்லாம் அவள் போக அனுமதி தாருங்கள்." (* பாதும் நப்பிரதமம் வியவஸ்யதி ஜலம் யுஷ்மாஸ்வ பிதேஷு யா:; நாதத்தே பிரிய மண்டனுபிபவதாம் ஸ்நேஹேனயாபல்லவம்:; ஆத்யே வஹ்குஸுமப்ருஸூதி ஸமயே யஸ்யாபவத்யுத்ஸவ:; ஸேயம்யாதி சகுந்தலா பதிக்ருஹம் ஸர்வைரனுக்ஞாயதாம்:)

ஆஹா! என்ன அற்புதமான அபிப்ராயம்! தோட்டத்தை அன்புடன் வளர்ப்பதற்கு இது ஒரு வழி. இன்னும் இதர வழிகளும் உண்டு. தோட்ட வேலை மிகவும் உன்னதமான ஓய்வு நேர வேலை என்பதில் சந்தேகமில்லை. நீ அழகான தோட்டத்தைச் சிருஷ்டித்திருக்கிருய். அதை வளர்ந்தோங்கச் செய். அன்புடன் அதை பராமரிக்கக் கற்றுக்கொள். அதை உன் ஓய்வு நேர உல்லாஸ வேலையாக்கிக்கொள். கடவுள் உன்னை ரக்ஷிப்பாராக!

*पातुं न प्रथमं व्यवस्यति जलं युष्मास्वपितेषु या
नादत्ते प्रियमण्डनापि भवतां स्नेहेन या पल्लवम् ।
आद्येवः कुसुमप्रसूतिसमये यस्याभवत्युत्सवः
सेयं याति शकुन्तला पतिगृहं सर्वैरनुज्ञायतां ॥



மன்னரும் ராணியும் லண்டனில் குண்டுவீச்சுக்காளான பகுதிகளைப்போய் பார்வையிட்டனர். குண்டுவீச்சால் நாசமடைந்த ஒரு வீட்டுக்கருகே அதன் சொந்தக்கார ஸ்திரீயுடன் அவர்கள் நேரில் சம்பாஷிக்கின்றனர்.




4

# அவள் துணிவு



வ. வேணுகோபாலன்

நீலனுக்குக் கவலை பெரிதாகி விட்டது. நாககன்னிகை நெடுமுடிக்கிள்ளிமீது காதல் கொண்டாள் என்று அவன் மனம் கலங்கியது. கிள்ளிமீது அவனுக்குக் கோபம் உண்டாயிற்று. ஆனால், அவன், நாககன்னிகையைத் தானே காதலிக்க வேண்டும் என்றும் கருதவில்லை. நெடுமுடிக்கிள்ளிக்கு அவள் உரியவளாவதையும் அவன் விரும்பவில்லை; அவள் வாழ்க்கையைக் கெடுத்து விடவும் எண்ணவில்லை. கிள்ளி மீது அவனுக்குக் கோபம் ஏற்பட்டதற்குக் காரணம் அவனுக்கே விளங்கவில்லை. எவ்வகையிலும் கிள்ளி மீதோ நாககன்னிகை மீதோ, அவனுக்கு வெறுப்புச் சிறிதும் இல்லை. எனினும் அவன் மனம் காரணம் இல்லாமலே கலங்கலுற்றது.

நீலன் செய்த
முடிவு

'என்னை விட, என் தொடர்பை விட, அந்தச்சோழனின் தொடர்பில் இவளுக்கு என்ன புதுமை இருக்கிறது? காரணம் என்ன? இதுகாறும் எந்த இளைஞனுக்கும் தன் மனத்தே இடம் கொடாதவள், இன்று இந்த அயல் நாட்டு அரசனிடம் காதல் செண்டாளே! ஆ! இவ்வாறு நிகழும் என்று நான் கனவிலும் கருதவில்லையே! இவள் தந்தை இவளை என் வசமல்லவா அனுப்பி இருக்கிறான்? ஆம்; என் அனுமதியின்றி இவள் இவனைக் காதலித்து விடமுடியுமா? மீண்டும் நாக நாடு செல்லும் வரையில், இவள் எனக்கே உரிமை! ஏன், அங்கே சென்ற பின்பும் பிறருக்கு இவளை உரிமையாகும்படி விடேன்; இவள் தந்தை என் விருப்பத்தை மறுத்து விடுவானா? ஒருகாலும் என்னை அவமதியான்; ஆம், இவளை இனிக் காப்பது என் பொறுப்பு; விரைவிலேயே, இந்நகரை விட்டுப் போய் விட வேண்டும். இல்லையேல், இந்தச் சோழ மன்னன், இவளை எவ்வாறேனும் கவர்ந்து விடுவான்!......' என்று சிந்தனை செய்தான் நீலன்.

கிள்ளியிடம்
மோஹம்

நாககன்னிகையை நினைக்கும் போது அவனுடைய கரடு தட்டிய தேகம் சற்றே விறு விறுப்புக் கொண்டது; விம்மிப் பொருமினான் அவளை நினைந்து. ஆனால், அவன் நினைவு பாழாயிற்று. வலிவும் வனப்பும் கொண்ட அவன் வடிவம் பார்ப்பவரைத் திகைப்புறச் செய்யும். இளமையும் அதற்கேற்ற பொலிவும் உடையவனே அவன். எனினும் நீலனை மதியாது கிள்ளியையே அவள் விரும்பினாள். ஆனால் நாககன்னிகைக்கு, நீலனிடம் அளவற்ற அன்பு உண்டு; எளிதில் அற்றுவிடும் அன்பு அல்ல; ஆனால், அது, காதலுள்ளத்தில் எழும் பிரேமையும் அல்ல; களங்கமற்ற அன்பு தான் என்றாலும், இளமை தொடங்கி, அவனுடன் உறவாடியதால் உண்டாகிய உடன் பிறப்புப் போன்ற தொடர்பே அது. என்றும் அவளால் மறக்கமுடியாதவன் நீலன். அன்று வரையில் அவள் அவனைப் பிரிந்து இருந்தவள் அல்ல. அவனும் அப்படியே. ஆகவே, நீலன் நாககன்னிகையைப்பற்றி உரிமை கொண்டாடுவதில் வியப்பு என்ன இருக்கிறது? கிள்ளியும் அவளும் காதலராவரோ என்று எண்ணுகையிலேயே அவன் உள்ளம் பொருமியது. தோள்கள் எழுந்து பூரித்தன. கிள்ளி மீது கோபம்; நாககன்னிகையைப்பற்றிச் கவலை! இரக்கம்; வருத்தம்! 'இவளிடம், அவனுக்கு அளவற்ற காதல் இருக்கிறது! இல்லையேல் தன் தேரையே இவளுக்குக் கொடுத்து விட்டுத் தான் நடந்து போவானா? இவளிடம் உள்ள பெருங்காதலே அவ்வாறு அவனை நிலை கலங்க வைத்தது! ஏன், இவளும்அதற்கு உடன்பட்டு, தேரில் ஏறிக் கொண்டாளே! நான் நிற்பதையும் இவள் கவனிக்கவில்லை! ஆனால் அப்போது நான் முந்திக் கொள்ளாவிடில் கிள்ளியே, இவளுடன் சேர்ந்து தேரைச் செலுத்தியிருப்பான். இவளைத் தன்னிடம் கொண்டே போயிருப்பான். என் அதிருஷ்டம், நான் இருந்தேன்; அந்தத் தேரில் போவதற்குத் தான், இவளுக்கு எவ்வளவு ஆசை! ஏனோ இவள் இவ்வாறு ஆனாள்!' என்று யோசித்தான்.

எங்கும்
அமைதி

சிந்தனை மிகுதியாயிற்று. அமைதி குலைந்து அகம் கொந்தளித்தது. மனம் போனவாறே



"என் அனுமதியின்றி இவளை அணுக யாருக்கும் உரிமையில்லை. மீறுபவருக்கு இதோ தண்டனை......" என்றவாறே வேலை உயர்த்தி கிள்ளி மீது எறிய முன் வந்தான் நீலன்.

மதிமயங்கினன். இருப்புக் கொள்ளவில்லை: எழுந்து, திரைக் குடிசையை விட்டு வெளி வந்தான்; நிலவு காய்ந்துகொண்டிருந்தது. அருகிலே; 'ஓ' என்ற பெரு முழக்குடன் கடல் ஓலமிட்ட வண்ணம் இருந்தது. கடற்காற்று சீறியது நாளுபுறமும். மரங்களின் மிகுதியால், சோலையின் இடையிடையே நிலவின் ஒளி விட்டு விட்டுத் தினைத்துக் கொண்டிருந்தது. புள்ளி, புள்ளியாய், வெள்ளி நிலவு சிதறிக் கொண்டிருந்தது. நாக கன்னிகையின் திரைக் குடிசையைச் சுற்றிலும், பல குடில்கள் போடப்பட்டிருந்தன, யாவரும் அமைதியுடன் உறங்கிக்கொண்டிருந்தனர். கடலொலியும் காற்றின் ஓசையுமே அல்லாமல் வேறு அரவம் அப்போது இல்லை. கண்ணுறங்காக் கழுகுகளும் மெய்ம் மறந்து கண்ணுறங்கும் சமயம் அது. நடு இரவானதால், அப்போதிருந்த, 'நள்' என்ற அமைதியை மஹாமயானத்து அமைதி; ஊழி யிறுதியின் அமைதி, உலகம் அழிந்து நீர் மயமாகியிருக்கும் பிரளய அமைதி என்று கூறலாம்; அமைதியின் பேரின்பத்திலே மயங்கித்தான் அனைவரும் உறங்கினரோ!

குடிலில் கண்ட காக்ஷி

அமைதி நிலவிய அந்நடு மயானத்தே, அமைதி குலைந்து திரிந்தான் நீலன். அவன் கால்கள், நாக கன்னிகை இருந்த குடிசைப் புறத்தே அடி எடுத்து வைத்தன. தன் காலடிகளின் அதிர்ச்சியால் அவள் விழித்துக் கொள்வாளோ என்றும் அவனுக்கு பயம். ஆனல் அந்நடு இரவில் அங்கே சுற்றிப் பார்க்கும் வழக்கம் அவனுக்கு உண்டு. அதனல் அவன் மனம் துணிந்து மெல்ல நடந்தான். அவன் மனத்தில் ஏதோ ஏக்கம் குமுறிக்கொண்டிருந்ததேயன்றி, வேறு வஞ்சனை சிறிதும் இல்லை. நாக கன்னிகையை அச்சமயம் கண் குளிரப் பார்க்கலாம் என்று எண்ணினன்: அவளைப் பார்ப்பதிலேயே ஓர் இன்பம் அவனுக்கு. ஆவல் துள்ளி எழுந்தது. நடையும் கடுகியது; பேராவலுடன் விழிகளை மலர நோக்கியவாறே, நாக கன்னிகையிருந்த திரைக் குடிசையை நோக்கினன். காற்றின் தாக்குதலால் திரைகள் 'பட பட' வென்று அடித்துக் கொண்டிருந்தன. மெல்ல நடந்து அந்தக் குடிலுக்குள் புகுந்தான். குடிலின் உட்புறத்தே முன் புறத்தில் நின்ருன். ஒருபுறம், காற்றின் வேகத்தால் நடனம் புரியும் சுடருடன் மணி விளக்கு எரிந்து கொண்டிருந்தது. மஞ்சத்தில் சுக நித்திரை செய்து பதுமை போன்று கிடந்தாள் அவள். மெல்லிய ஆடையை மேலே போர்த்திருந்தாள். ஆழ்ந்த பெருமூச்சுடன் அவள் உறங்கும் போது மார்பு எழுந்து பொருமுவதை அவள் மேலாடை நன்கு எடுத்துக் காட்டியது. அவளது அங்கலாவண்யத்தை அள்ளிப் பருகுபவன் போல் நோக்கிச் சிறிதே நின்ருன் நீலன். அவ்வளவே, அவன் மனம் ஆறுதல் அடைந்தது. உள்ளம் பூரித்தது; உடல் நிமிர்ந்தான். 'ஆ! இவள் அழகிற்கு இணையும் உண்டோ? சோழன் ஆசைக்கு இவள் இடமானது ஓர் ஆச்சரியமோ? ஆனல், இவளை அவன் கவர்ந்து கொள்ள யான் விடுவேனே?' என்று எண்ணினன். காற்று சீறி வீசியது அப்போது. அதனல் ஒருக்கால் விழித்துக் கொள்வாளோ என்று சந்தேகம் கொண்டு பின் நகர்ந்தான். அவன் மனம் அலை பாய்ந்தது. 'எவ்வாறேனும் இவளை, சோழன் கையில் சிக்க விடாமல் கொண்டு போய்விட வேண்டும்' என்று யோசித்தவாறே குடிலை விட்டு வெளி வந்தான். அவன் கண்களுக்கு, அக் குடிலுக்கு அருகே நின்ற தேர்

(27-ம் பக்கம்)

# நிலாவும் விருந்தும்



பி. ஸ்ரீ

எங்கும் பால்-கடல் வெள்ளமிட்டிருப்பது போல ஒரே வெண்மையாகத் தோன்றுகிறது. தூரத்திலுள்ள குன்றுகளெல்லாம் பாலபிஷேகம் செய்துகொள்ளும் வெள்ளிமலைகளைப்போலத் தோற்றம் அளிக்கின்றன.

இந்த வெண்ணிலவிலே ஒரு பெண், தனியாக மேல் மாடத்திலுள்ள நிலாமுற்றத்திலே நின்றுகொண்டிருக்கிருள். ஒரு தோழி கூட அருகே யில்லை.

## பழிக்குப் பழி

இந்தப் பெண்மணியின் ஜோதி-முகத்திற்குத் தோற்றுப்போன சந்திரன், இப்பொழுது இவள் மீது பழிக்குப் பழி வாங்க வேண்டுமென்றுதான் மீண்டும் வந்து அவ்வளவு குதூகலமாய்ப் பிரகாசித்துக்கொண்டிருக்கிருனே?

“இவள் தன்னுடைய காதலனாகிய வெங்கடேசுரெட்ட மன்னனைப் பிரிந்திருக்கிருள் இப்போது!” என்பதைத் தான் அதி தூரத்திலே வான வீதியில் திரிந்துகொண்டிருக்கும் அந்தச் சந்திரன் எப்படி அறிந்துகொண்டானே? தனது பகைமையைக் காட்டிக்கொள்ள இதுதான் சமயம் என்று அவன் தீர்மானித்து விட்டானல்லவா?

## ஏன் இந்தப் புத்தி?

இந்த நிலாவுக்குத் தான் ஏன் இந்தப் புத்தி? ஏன்? இப்படிச் சுடுகிறது? ஐயோ! நிலவா, நெருப்பா? அதோ தோன்றுவது சந்திரனில்லையா? அப்படியானல் குளிர்ந்திருக்கும் வானமெல்லாம் கொப்புளங்களாக நிறைந்திருப்பதற்குக் காரணம் என்ன?

ஆ! ஆ! அவை கொப்புளங்கள் அல்ல; நட்சத்திரங்களே! அதுவும் நெருப்பு-வட்டமல்ல; வெண்ணிலாவின் வட்ட முகம் தானே!

இவ்விதமாக, முன்னுக்குப் பின் முரணுகும்படியான எண்ணங்கள் இவள் உள்ளத்திலே அலையெறிகின்றன. “ஐயையோ! என் புத்தி ஏன் இப்படியெல்லாம் போகிறது?” என்று கவலை கொள்ளுகிருள்.

## நிலவு-வெள்ளமும் நினைவு-வெள்ளமும்

நிலவு - வெள்ளத்தைப்போல் இவளது நினைவு வெள்ளமும் எங்கும் பரந்து பொங்குகிறது. ஆனல் இவளுடைய நினைவுகளெல்லாம் காதலனது உருவத்தைக்குறித்தே சுற்றிச் சுழல்கின்றன, கிரகங்கள் சூரியனைச் சுற்றிப் பிரதட்சிணம் வருவது போலே.

இவர்களுடைய காதலனுகிய வெங்கடேசுரெட்ட மன்னன், எட்டையபுரத்திலும், இவள் இதய மகாராஜ்யத்திலும் ஒருங்கே அரசு புரிந்து வருகிருன். உருவிலும் திருவிலும், பக்தியிலும் வீரத்திலும் நிகரற்று விளங்குகிருன். அவன் சில சமயங்களில் பகைவர்களை அடக்கும் பொருட்டுப் படை கொண்டு போவான். சில சமயங்களில் தீர்த்த யாத்திரையாகப் பிரயாணம் செய்துகொண்டே சிவ பக்தியில் மூழ்கிக்களிப்பான். மன்மத சொரூபனுகிய தன் தலைவன் பக்தியிலும் வீரத்திலும் ஒருங்கே சிறந்து விளங்கியது, காதலியின் உள்ளத்திற்கு அமிர்தமாயிருக்கும். அப்போது அவனுடைய ரூப சௌந்தரியத்தையும் குண சௌந்தரியத்தையும் குறித்த நினைவுகள் ஆனந்த வெள்ளமாகப் பெருகி இவளை மூழ்கடித்துவிடும்.

ஆனல் இந்த நிலாவிலே,—காதலனைப் பிரிந்திருக்கும் இந்த நிலையிலே,—அவனுடைய அழகும் ஆண்மையும் பக்தியும் வசிகர சக்திகளும் எல்லாம் அவள் நெஞ்சைத் துன்ப வெள்ளத்திலே ஆழ்த்திவிட்டன.

## அருளில்லாத அழகுதான்!

இப்போது அந்த அழகே வெறும் வெளிவேஷம் என்று தோன்றுகிறது!

ஆளுக்கே அழகன், எங்கள்
இளசை வெங்கடேசு ரெட்டன்
[இளசை-எட்டையபுரம்
சமஸ்தானம்.]

என்று இவள் நினைக்கும்போது, அழகிற்குத் தக்கபடி அருள்—அந்தப் புறஅழகிற்குத் தகுந்தபடி அக அழகு—அவனிடம் காணப்படவில்லையே! என்ற துன்பமும் ஏற்படுகிறது.

## அன்பில்லாத பக்திதானு?

(ஈசனுக்கு விருந்து)

அவனுடைய பெரும் பக்தி கூட இப்பொழுது ஒரு பெருங்குறையை மறைத்திருப்பது போலக் காண்கிறது.

அன்பை ஈசன்
தாளுக்கே விருந்திட்டான்!
[தாள்—திருவடி]

என்று இவள் வருந்துகிருள்! பரமேச்வரனது திருவடிகளுக்கே தன் ஆருயிர்த் தலைவன் தன் அன்பு முழுமையும் விருந்தாக்கி விட்டான்!—என்று நினைக்கும்போது, அந்த அன்பு-விருந்திலே கொஞ்சம் கூடத் தனக்குக் கிடையாதோ?-என்ற பயமும் இவளுக்கு ஏற்படுகிறது.

## வீரமா? கொடுமையா?

(வாளுக்கு விருந்து)

இப்படி அன்பை இறைவனுக்கே விருந்திட்டவன், தன் கைவாளுக்கும் ஒரு விருந்து செய்கிறானாம்:

ஒன்னலர்கள் செங்குருதித்
தசையைச் செங்கை
வாளுக்கே விருந்திட்டான்!

[ஒன்னலர்—பகைவர். செங்குருதி—சிவந்த இரத்தம். செங்கை—செம்மையான கை.]

பகைவர்களின் சிவந்த இரத்தத்தோடு கூடிய சதையைத் தன் செம்மையான கை வாளுக்கே விருந்தாக்குகிறானாம். இத்தகைய வீரமும் இப்போது இவளுக்கு அவனுடைய கொடுமையை ஒருவாறு வெளியிட்டு இவளுடைய விரஸத்தையும் கொஞ்சம் தூண்டுவது போலவே தோன்றுகிறது.

## இரக்கம் இல்லையே!

(மன்மத விருந்து)

அன்பை ஈசனுக்கும், பகைவர்களைத் தன் கை வாளுக்கும், விருந்திட்ட வெங்கடேசுரெட்டன் மன்மத சொருபனாக விளங்குவதால், மன்மதனுக்கும் ஒரு விருந்து செய்கிறானாம்:

மாதரார் உணர்வையெலாம்
மலர்க்கை வாளி
வேளுக்கே விருந்திட்டான்!

[வாளி—அம்பு. வேள்—மன்மதன்.]

பெண்களுடைய உணர்வையெல்லாம், கையில் மலர்-அம்பு கொண்ட மன்மத வேளுக்கே விருந்தாக்குகிறானாம். இது பெண் குலத்தின்மீதே அவனுக்கு இரக்கம் இல்லை யென்பதை ருசுவாக்குகிறதல்லவா?

## வெண்மதியும் பெண்மதியும்

(கடைசி விருந்து)

இவ்விதமாக ஈசனுக்கும், கைவாளுக்கும் மன்மதனுக்கும் விருந்திட்டு வருகிறவன், இப்பொழுது என்னை ஹிம்ஸிக்கும் இந்த வெண்ணிலாவுக்கும் ஒரு விருந்து செய்கிறானே!—என்று தலைவி புலம்புகிறாள். அது என்ன விருந்து? பாருங்கள்:

வெண்மதிக் (கு)
என் பெண்மதியை
விருந்திட்டானே!

[மதி-சந்திரன்; புத்தி.]

அதாவது, வெண்மையான இந்தச் சந்திரனுக்கு என் பெண் புத்தியையே விருந்தாக்கி விடுகிறான்!—வெண்மதிக்கு என் பெண்மதியைப் பலி கொடுத்து விடுகிறான்!—என்று காதலி வருந்திக் கதறுகிறாள். "இந்த வெண்ணிலாவிலே எனக்குப் பைத்தியம் பிடித்து விடும்போலிருக்கிறது!" என்கிறாள். பேதைமை நிறைந்த என் பெண் புத்திக்கு இவ்வளவும் வேண்டும்!" என்கிறாள். "அவன் திருமேனிக்கே காதல் இழைத்த இந்தப் பெண்-புத்திக்கு இவ்வளவு தண்டனையும் வேணுமல்லவா?" என்று நொந்து கொள்ளுகிறாள்.

## பாட்டின் வடிவம்

இக் கருத்துக்களெல்லாம் நெருங்கி நிறைந்து ஒரு கவிஞனுள்ளத்திலே பாட்டின் வடிவமாகச் சமைவதைப் பாருங்கள். வெங்கடேசு ரெட்டன் பலருக்கும் பலவகையான விருந்து செய்வதாக அமைந்திருக்கும் இந்தப் பாட்டின் மனோ தர்மத்தையும் அழகிய வடிவத்தையும் பாருங்கள்:

ஆளுக்கே அழகன், எங்கள்
இசை வெங்கடேசு
[ரெட்டன்,
அன்பை ஈசன்
தாளுக்கே விருந்திட்டான்!
மாதரர் உணர்வை
[யெல்லாம்,
மலர்க்கை வாளி
வேளுக்கே விருந்திட்டான்!
வெண்மதிக்கென் பெண்மதியை
விருத்திட்டானே!

பாடிப் பாடிப் பாருங்கள்; இந்தப் பாடல்-விருந்தைச்

(21-ம் பக்கம்)




# பரதேசி பாட்டு



## கி. வா. ஜகந்நாதன்

நாடோடிப் பாடல்களிலே ஞான மார்க்கத்தை உபதேசிக்கும் பாடல்கள் பல உண்டு. பிச்சை வாங்கி உண்ணும் பரதேசிகள், முன் காலத்தில் அந்தப் பாடல்களைப் பாடி வருவார்கள். பாட்டைக் கேட்கும் போது மனிதனுக்கு உடம்புக்குள்ளே உயிர் ஒன்று இருக்கிறது என்ற ஞாபகம் வரும். இந்த மண்ணுலகத்துக்குப் புறம்பேயும் வாழ்வுண்டென்பது தெரியவரும்; தினந்தோறும் நாம் செய்யும் வேலைகள் நமக்காகச் செய்வன வல்ல வென்று இரக்கம் உண்டாகும்.

நந்த வனத்தி லோராண்டி—
அவன்
நாலாறு மாசமாய்க்
குயவனை வேண்டிக்
கொண்டு வந்தானொரு தோண்டி
—அதைக்
கூத்தாடிக் கூத்தாடிப்
போட்டுடைத் தாண்டி

என்று பரதேசி பாடும்போது, அதனுள்ளே பொதிந்த பொருளை நாம் உணர்ந்து கொண்டு சிந்தனையில் ஆழ்கிறோம்.

'உலகமாகிய நந்தவனத்திலே நல்ல புஷ்பச் செடிகளைப் பயிர் பண்ணி, ஆண்டவனுக்கு அர்ச்சனை பண்ணவல்லவா வந்திருக்கிறோம்? நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டி இந்தத் தோண்டி கிடைத்திருக்கிறது. இந்தத் தோண்டியைச் சரியான படி உபயோகித்துச் செடிகளுக்கு ஜலம் வார்த்து, நந்த வனம் செழிக்கப் பண்ணவேண்டுமே. அப்படியில்லாமல், இந்தக் கருவியாகிய தோண்டியினிடம் மயங்கிப்போய், நம் லக்ஷ்யத்தையே மறந்து, தலைகால் தெரியாமல் குதிக்கிறோமே! நமக்கு என்ன லாபம்? கடைசியில் குடமும் கீழேவிழுந்து உடைந்து போகிறது. என்றைக்காவது ஒரு நாள் உடைந்துபோவது தான். உடைவதற்குள்ளே, நம்மாலான முயற்சி செய்து சில புஷ்பச் செடிகளுக்காவது ஜலம் விட்டிருக்கலாமே!'

இப்படிச் சிந்தனை கிளர்ந்து எழுகிறது. புஸ்தகங்களில் வேதாந்தத்தைப் படித்த அறிவாளிகளுக்கு இந்தச் சிந்தனை விரிவடைந்து, மேற்கோளுடன் நெஞ்சில் இடம் பெறுகிறது. பரதேசி தன் பாட்டுக்கு ஒரு கவளம் சோற்றைப் பெற்றுக் கொண்டு அடுத்த வீட்டுக்குப் போய்விடுகிறான்.

இந்த மாதிரி பல வகையான பாடல்கள் இருக்கின்றன. வெளிப்படையாக அர்த்தம் விளங்காமல் மறை பொருளை உடைய பாடல்கள் பல. சித்தர் பாடல்களென்று வழங்குவன வெல்லாம் இந்த வகையைச் சேர்ந்தனவே. இடைக் காட்டுச் சித்தர், பாம்பாட்டிச் சித்தர், கடுவெளிச் சித்தரென்று சொல்கிறவர்களெல்லாம் அஷ்டமா சித்தி கைவந்த சித்தர்கள் என்று நினைக்கவேண்டாம். அப்படி அவர்கள் உண்மையில் இருந்தார்களென்று வைத்துக் கொண்டாலும், அவர்களுக்கும் அவர்கள் பெயரால் வழங்கும் பாடல்களுக்கும் சம்பந்தமில்லை. பரதேசிகள் பல காலமாக ஞான மார்க்கமாகப் பாடிய பாடல்களே அவை. அவற்றை இயற்றிய புலவன் யாரோ ஒரு பரதேசி; அல்லது பரதேசிகளுடன் நெருங்கிப் பழகுபவன்.

இந்த உடம்பைப்பற்றி எத்தனை விதமாக, எவ்வளவு விசித்திரமாக அந்தப் பரதேசிகள் வருணிக்கிறார்கள் தெரியுமா?

காய மேயிது பொய்யடா
காற்ற டைத்த பையடா
மாயனார் குயவன் செய்த
மண்ணு பாண்டம் ஓடடா.
உப்பு மண்ணும்
ஓட்டை! மூங்கில்
ஒட்டி வைத்த கூடடா
உளுத்த நரம்பும்
வெளுத்த தோலும்
இழுத்துக்கட்டிய கூடடா.
குப்பைக் கீரை
முளைத்தது போல்
கூடு கட்டின காடடா
கொழுத்த நரம்பும்
புழுத்த தோலும்
இழுத்துக் கட்டின கூட்டடா.

வேறொரு பரதேசி பாடுகிறார் கேளுங்கள்.

தூங்கையிலே வாங்குகிற
மூச்சு—மேலே
சுழிமாறி வாங்கையிலே
போனாலும் போச்சு;

பாங்கான திருநாளுண்
டாச்சு—எங்கும்
பல பேர்கள் கூடியே
கதைபேச லாச்சு!
சுழல்கின்ற பம்பரக் கட்டை—
விசிறித்
தூக்கையிலே கயிறறுந்
தாலோலோட லொட்டை
பழகுகின்ற வாசிமனப் பூட்டை
—உற்றுப்
பார்க்கையில் வெட்டவெளி,
பலபீத்தல் ஓட்டை.

இந்தஉடம்பில் எத்தனையோ ஆச்சரியங்கள் இருக்கின்றன. உலகத்தில் மேதாவிகள் கண்டு பிடிக்கின்ற சூக்ஷ்மமான யந்திரங்களுக்கும் மேற்பட்ட யந்திரப்பதுமை. இந்த அருமையான பதுமையை ஒருவரும் பாராட்டுவதில்லை; இந்தச் சிங்காரக் கோயிலைக் கோயிலாக வைப்பதில்லை. இக் கருத்தை ஒரு பரதேசியின் பாட்டில் பார்க்கிறோம்.

சித்திரப் பதுமையிது
சிங்காரக் கோயிலிது
மற்றப் பதுமையெல்லாம்—
தங்கமே
மட்டிப் பதுமையடி—
ஞானத் தங்கமே
மட்டிப் பதுமையடி
காற்றைப் பிடித்துக்
கரகத்திலடைத்ததுபோல்
ஊற்றைச் சடலத்துள்ளே—
தங்கமே
உயிர்நின் றுலாவுதடி—
ஞானத் தங்கமே
உயிர்நின் றுலாவு தடி.

இந்த உடலுக்கு எவ்வளவு காலம் கௌரவமென்பதை அவர் நினைவுறுத்துகிறார்.

சாகுபடி கோட்டையிலே
சந்தைக்காரன் பேட்டையிலே
ஏகஜனக் கூட்டமடி—தங்கமே
எமன் வந்தால் ஓட்டமடி—
ஞானத்தங்கமே
எமன் வந்தால் ஓட்டமடி.
ஆடை நமக்கிரவல்

(22-ம் பக்கம்)





# சில்பியின் கனவு



க. சூரியநாராயணன், பி. ஏ.

மாசு மருவற்ற இயற்கையின் வனப்பு என் கண்களைக் கவர்ந்தது. அழகிய மலைச்சாரல். வானை அளாவிய பலவிதஉயர்ந்த ஜாதி மரங்கள். பக்ஷி ஜாலங்களின் இன்னிசை. சப்தம் இயற்கையே தன் எழிலைக் கண்டு சந்தோஷப்படுவதைப் போல் தோன்றிற்று. இளந் தென்றலுடன் தவழ்ந்து வந்து கொண்டிருந்த சுகந்தம் உள்ளத்தில் ஒருவித பரவசத்தை உண்டு பண்ணிற்று. பாழடைந்த சிலாமண்டபம் ஒன்று வெகு தொலைவில் காணப்பட்டது. பச்சைப் பசேல் என்று காணப்பட்ட அக்குன்று தன் மார்புடன் அதை அணைத்துக்கொண்டிருந்ததோ என்று சந்தேகப்படும்படி இருந்தது.

'சடக்' என்ற சப்தம். இவ்வுலகில் தான் இருக்கிறோம் என்பதை ஞாபகப்படுத்திற்று.

என் அழகிய 'போர்டு'கார் அதற்கு மேல் செல்ல மறுத்து விட்டது.

"சாமி பெட்ரோல் தீர்ந்து விட்டதுங்க" என்று கைகளைப் பிசைந்தான் என் டிரைவர்.

நாங்கள் இருந்ததோ ஒரு அழகிய குக்கிராமம். பக்கத்தில் இருந்த டவுனுக்கும் அதற்கும் இடையே 4 மைல் நீளமுள்ள காட்டுப் பிரதேசம்.

சரி. அடுத்த டவுனில் போய் பெட்ரோல் வாங்கிக்கொண்டு சீக்கிரம் வந்து விடு என்று சொல்லி விட்டு அவனிடம் பத்து ரூபாய் கொடுத்து அனுப்பினேன். மற்றொரு முறை திரும்பிப் பார்த்தேன். இயற்கையழகுடனும் செயற்கை அழகுடனும் கலந்து பிரகாசித்த அந்த சிலா மண்டபம் என் கண்களை மயக்கியது. அதை உடனே பார்த்து விட்டு வரவேண்டும் என்று தீர்மானித்தேன்.

என் அருகில் என் மனைவி ராஜம் நின்று கொண்டிருந்தாள். "என்ன ராஜம்?" என்று என் நோக்கத்தை தெரிவிப்பது போல் அவளைப் பார்த்தேன். என் நோக்கத்தை அறிந்த அவள் "உங்கள் இஷ்டம்" என்று சொல்லி விட்டு புன்னகை புரிந்தாள். அந்தப் புன்னகைக்கு இவ்வுலகையே பரிசாகக் கொடுத்தாலும் போதாது.

மலை மீது ஏற ஆரம்பித்தோம். செப்பனிட்ட பாதை இல்லாததினால் முதலில் சற்று சிரமமாகத்தான் இருந்தது. ஆனால் பிறகு பழகி விட்டது. முள்செடிகளை விலக்கிக்கொண்டே நடக்க நேரிட்டது. கடைசியில் ஒருவாறாக மண்டபத்தை அடைந்தோம்.

கதிரவனின் மாலைக்கிரணங்களில் மிதந்து கொண்டிருந்தது அக்கலா மண்டபம். உள்ளே சென்றோம். மூக்கைப் பிடித்துக் கொண்டுதான் நடக்கவேண்டியிருந்தது. நிசப்தத்தை அனுபவித்துக்கொண்டிருந்த அம்மண்டபத்தில் கரப்பான் பூச்சிகளும் வௌவால்களுமே வாசம்செய்து கொண்டிருந்தன. உள்ளே சென்ற நாங்கள் சற்று பிரமித்து விட்டோம். வெளியழகை விட அம்மண்டபத்தின் உள் அழகு பன்மடங்கு சிறப்புற்று விளங்கியது. எங்கு பார்த்தாலும் அழகாகச் செதுக்கப்பட்ட சிலைகள். பக்கத்துச்சுவர்கள் இடிந்து போய் காணப்பட்டன; ஆனால் அவைகளில்செதுக்கப்பட்டிருந்த கற்பனைக் காட்சிகள் கம்பீரத்துடன் பல போர் நிகழ்ச்சிகளை எடுத்துக்காட்டின. ஒவ்வொரு காட்சியையும் வெகுவாக ரஸித்தோம். ஆனந்தக் கண்ணீர் என்னையும் அறியாமல் என் கண்களில் மல்கியது. இந்தியாவின் பண்டைய கால ஓவிய சிற்பத் திறமைகள் தான் என்ன!

கொலுமண்டபத்தைப் போல் காணப்பட்ட விசாலமான அவ்வறையிலிருந்து இருண்ட பாதையொன்று சென்றது. அதைப் பின்பற்றி நந்தவனம்போல் காணப்பட்ட ஒரு அழகிய சோலையை அடைந்தோம். தூரப் பார்வைக்கு சோலையின் நடுவில் பிரம்மாண்டமான அழகிய சிலையொன்று கம்பீரத்துடன் காணப்பட்டது. மந்தகாசம் பொங்கும் உள்ளத்துடன் அவ்விடத்தை அடைந்தோம். எங்கள் எண்ணம் பாழாகவில்லை. உண்மையிலே மிகவும் அழகாகச் செதுக்கப்பட்ட பெண் உருவம் ஒன்று அங்கே காணப்பட்டது. அதை உருவாக்கிய சிற்பி தன் வாழ்நாள் முழுவதையும் அதைச் செதுக்குவதில் கழித்திருக்க வேண்டும்! இல்லாவிட்டால் பெண்மையின் அழகை நன்கு வெளிப்படுத்தும் அச்சிலையை அவ்வளவு பொலிவுடன் அவன் சிருஷ்டி செய்திருக்க முடியுமா? அதைக்கண்டு எல்லையற்ற வியப்புற்றோம். உயிரற்ற அச்சிலையிலிருந்து பெண்மையின் அழகு கொட்டிக்கொண்டிருந்தது.

"இச்சிலை உங்களுக்கு மிகுந்த வியப்பை அளிக்கிறது அல்லவா?" என்ற குரலைக் கேட்டு திரும்பினோம். வாடி வதங்கி குழி விழுந்த கன்னங்களுடன் ஒரு கிழவன் எங்கள் முன் காணப்பட்டான். அவனை அந்த ஏகாந்தப்பிரதேசத்தில் கண்டது எங்களுக்கு சிறிது வியப்பையே அளித்தது. இருந்த போதிலும் "ஆம்" என்று பதிலளித்தேன். அவன் சிரித்துக்கொண்டே தன் வாயிலிருந்த 'உக்கா'வை எடுத்துவிட்டு, "இருக்கும் இருக்கும். இச்சிலையே உங்களுக்கு வியப்பை அளிக்கும்பொழுது இதைப்பற்றிய கதை உங்களுக்கு இன்னும் அதிக வியப்பையே அளிக்கும் அல்லவா?" கிழவனின் நோக்கத்தை அறிந்தேன். அப்பொழுதுதான் அவன் அம்மண்டபத்தின் காவற்காரன் என்பதையும் அறிந்தேன். என் பதிலைக்கூட எதிர்பாராமல் அக்கிழவன் தன் மெல்லிய குரலில் பின்வருமாறு கூற ஆரம்பித்தான்:—

* * * *

இந்தியர்கள் வீரவாழ்வு வாழ்ந்த காலம் அது. பொன்னேரியைத் தலைநகராகக் கொண்ட சிற்றரசன் பிரதாபன் எதிரிகளை முறியடித்துவிட்டு வெற்றி கோலத்துடன் தன் திக்விஜயத்திலிருந்து திரும்பி வந்து சொல்ப தினங்களே ஆகியிருந்தன. அரசனின் இறுமாப்புக்கு ஓர் அளவேயில்லை. கம்பீரத்துடன் சிம்மாசனத்தில் வீற்றிருந்தான். வெற்றிக்கு அறிகுறியாக மலைச்சாரலில் ஒரு சிற்ப மண்டபத்தை சிருஷ்டிக்க வேண்டும் என்பது அரசனின் ஆசை. கேட்க வேண்டுமா? அரசனின் ஆஸ்தான சிற்பி நரேந்திரன் வரவழைக்கப்பட்டான். மண்டப வேலையும் அவனிடம் ஒப்புவிக்கப்பட்டது. அன்றைய தினத்திலிருந்து பொன்னேரியில் பல உளிகளின் சப்தம் இராப்பகலாய்க் கேட்டது.

இதற்கிடையே பிரதாபன் தன் மகள் செளமியா தேவியுடன் மறுபடியும் திக்விஜயத்தின் பொருட்டு தெற்கு நோக்கிப் புறப்படலானான். அரசனைப் பற்றி குடிகளில் பலர் பலவிதம் பேசிக்கொண்டனர். அரசன் தாயற்ற தன் இளவரசியிடம் தன் உயிரையே வைத்திருந்தான் என்பதும், ஒப்பற்ற செளந்தர்யம் படைத்த அவளை ஒருவரும் காணச்சகியான் என்பதும் யாவரும் அறிந்த உண்மை. எத்தனையோ வெற்றிக் கிரீடம் படைத்த இளவரசர்கள், இளவரசி செளமியாவை மணக்க முன் வந்தனர். ஆனால் பிரதாபன் அவர்கள் அனைவரையும் உதறித்தள்ளி விட்டான். அவர்கள் அனைவரும் தன் மகளுக்கு அருகதையற்றவர்கள் என்பது அவன் எண்ணம் போலும்! இயற்கையிலேயே அவன் மகா கர்வி!

செளமியா அழகு தேவதைதான். ஆனால் அவள் அழகு, பருகுவார் அற்று வீணாகிக் கொண்டிருந்தது. அவள் தன் நினைவு அறிந்து தன் தந்தையையும் மற்றும் சில உற்றார் உறவினர்களையும் தவிர வேறு எவரையும் பார்த்து அறியாள். அவள் தந்தை அவளிடம் அன்பு கொண்டிருந்தான் என்பதுதான், உண்மை ஆனால் அது அவளை ஏகாந்தச் சிறையில் வைத்து அடைத்திருந்தது. அந்தச் சிறையில் அவளை






இந்திய மாலுமி உண்மையில் விரும்புவது தேயிலைப்பானம்... நீண்டநேரம் கண்விழித்து எதிர்பாராத விபத்துகளிலிருந்து தப்பித்துக்கொள்ள இந்த நண்பனை...தேயிலைப்பானத்தை...அவன் நம்பியே இருக்கிறான் அது அவனை ஒருபோதும் கைவிடாது. தேயிலைப்பானம் உற்சாகம் அளித்து வலுவையும் ஊட்டி மனதுக்கும் உடலுக்கும் அமைதியை அளிக்கும். இந்திய கடற்படை வீரர்கள் இதையேதான் சதா விரும்புகிறார்கள். அவர்கள் உதாரணத்தைப் பின்பற்றுங்கள். யுத்தத்தினால் உண்டாகும் அலுப்பையும் சோர்வையும் போக்க இந்தியத் தேயிலைப்பானத்தை அருந்துங்கள்.

## நெருக்கடிக்காலங்களில்
# இந்தியத்தேயிலைப் பானம்
## அருந்துங்கள்

இந்தியன் டீ மார்க்கெட் எக்ஸ்பான்ஷன் போர்டாரால் வெளியிடப்பட்டது

யும் அவளுடைய சேடிகளையும் தவிர வேறு எவற்கும் அனுமதி கிடையாது. இது அரசனின் ஆக்ஞை. அரசனின் ஆக்ஞையை மீறினல் என்ன நடக்கும் என்பது குடி ஜனங்கள் யாவரும் அறிந்ததே.

காலச் சக்கரம் சுழன்று பல மாதங்களுக்குப் பிறகு நின்றது. சிலா மண்டபமும் அநேகமாக முடிவடைந்து விட்டது. நரேந்திரன் தன் சிற்பத்திறன் முழுவதையும் நன்கு வெளிப்படுத்தியிருந்தான். செதுக்கப்பட்டிருந்த ஒவ்வொரு சிலையிலும் ஜீவனும் களையும் ததும்பிக்கொண்டிருந்தன. நரேந்திரனே தன் வேலைப்பாட்டைக் கண்டு பொருமையுற்றுன்.

மக்களை மயக்கும் மாலைநேரம். ஆடுமாடுகள் தங்கள் சலங்கை சப்தத்துடன் சுற்றுப்புற வயல்களிலிருந்து நகரை நோக்கிவந்து கொண்டிருந்தன. பகல் முழுவதும் செய்த வேலையின் களைப்பைப் போக்கும் பொருட்டு நரேந்திரன் சிலாமண்டபத்தின் அருகில் இருந்த மல்லிகைத் தோட்டத்திற்குச் சென்றுன். அந்த இடத்திலிருந்து நகரத்தின் வெளிப்புறத் தோற்றம் பார்ப்பதற்கு வெகு ரம்யமாய் இருந்தது. இயற்கையின் எழிலில் தன் மனதைப் பறிகொடுத்துவிட்டான். செயற்கை அழகின் சிருஷ்டி கர்த்தா நரேந்திரன். கண்களை மூடினுன். துண்டை விரித்து அங்கேயே புல் தரையில் படுத்துவிட்டான். உறக்கம் அவனை மிஞ்சிவிட்டது. வானம் நன்ருக இருட்டிவிட்டது. தாரகைகள் ஆகாயத்தில் கொஞ்ச ஆரம்பித்துவிட்டன. நரேந்திரன் ஏதோ இன்பக்கனவுகளைக் கண்டு கொண்டிருந்தான் போலும். உறங்கிக் கொண்டிருந்த அவன் முகத்தில் புன் சிரிப்புத்தாண்டவமாடிக் கொண்டிருந்தது.

ரோஜா இதழ்களை ஒத்த அதரங்களையும், பவழச் செவ்வாயையும் உடைய அழகிய பெண் ஒருத்தி அவனை நோக்கி வந்து கொண்டிருந்தாள். பார்ப்பதற்கு அவள் ஓர் அரசகுமாரியைப் போல் தென்பட்டாள். அதுவரையில் அப்பேர்ப்பட்ட மோஹன உருவம் ஒன்றை அவன் கண்டதேயில்லை. அவளுடைய எழிலுக்கு தன் இதயத்தையே பரிசாக அளித்துவிட்டான் நரேந்திரன். இருவரும் மனமொத்த காதலராகிவிட்டனர்.

இப்பொழுது அப்பெண்ணின் மடியில் தலையை வைத்துப் படுத்துக்கொண்டிருந்தான் நரேந்திரன். எங்கிருந்தோ இனிய வீணுகானம் வந்து கொண்டிருந்தது. திடீர் என்று வீணுகானம் நின்றது. தேகம் முழுவதும் ரோமம் அடர்ந்த பயங்கர உருவம் ஒன்று நரேந்திரனை நோக்கி வந்து கொண்டிருந்தது. முதலில் அவன் நடுங்கியே விட்டான். பிறகு தன்னைத் தானே சமாதானப்படுத்திக்கொண்டு "நீ யார்?" என்று கேட்டான். அதற்கு அந்த பயங்கர உருவம் வானமே இடிந்து விழும்படி சிரித்துக்கொண்டு "நானு? நான்தான் காலன்" என்றது.

"என்னைக் கொண்டுபோவதற்காக வந்திருக்கிருயா? வேண்டாம் என் இன்ப வாழ்வில் குறுக்கிடாதே. அதனுல் விபரீதங்கள் நேரிடும்" என்று நாக்குக் குளற பதில் அளித்தான் நரேந்திரன். ஏளனமாகச் சிரித்துக்கொண்டே காலன் அவன் மீது பாசக்கயிற்றை வீசினுன். "ஐயோ" என்ற சப்தம்.

நரேந்திரன் ஓர் அலறலுடன் தன் கனவிலிருந்து திடுக்கிட்டு எழுந்தான். சுற்றிலும் மல்லிகைச் செடிகளைத் தவிர வேறு ஒன்றும் காணப்படவில்லை.

(18-ம் பக்கம்)

# மாறுவேடப் போட்டி



“ கணி ”

ராஜன் பெரிய பணக்காரர். தாசில்தாராக இருந்து நிறைய சம்பாதித்து தற்சமயம் மாம்பலத்தில் பல பங்களாக்கள் வாங்கிக்கொண்டு சுகவாசியாகக் காலத்தை கழிக்கிறார். ஆனால் அவரது மனைவி அவருடன் இருந்து அனுபவிக்கக் கொடுத்து வைக்காமல், சில வருடங்களே வாழ்ந்து இரு ஆண் மகவுகளை ஈன்று இறந்து விட்டாள். ராஜனுக்குப் பாலன், ரகு என்ற இரு பிள்ளைகளுமே ஆறுதலாயிருந்தார்கள். நாளொருவண்ணமும் பொழுதொரு மேனியுமாக அவ்விருவரும் வளர்ந்து பச்சையப்பன் கல்லூரியில் படித்து வந்தனர்.

அன்று ஞாயிற்றுக்கிழமை. காலை 7-மணிக்கே, பாலுவும் ரகுவும் தங்களது காலேஜில் வருடாந்திர விழா என்று அவர்களது தோழன் சந்திரனுடன் போய் விட்டனர். திரும்பி வர மணி பத்து ஆகும் என்று சொல்லி விட்டுப் போயினராதலால் ராஜன் உணவருந்தி விட்டுப் படுத்துக்கொண்டார்.

மணி பதினொன்று ஆயிற்று, பன்னிரெண்டும் அடித்தது. போன இரு பிள்ளைகளும் வரவேயில்லை. ராஜன், காலேஜில் அவர்களுக்கு வேறு ஏதாவது அலுவல் இருக்கும் என்று பேசாமலிருந்தார். கடைசியில் மணி இரண்டும் அடிக்கவே, அவரது மனதில் ஏதோ ஒருவித பயம் உண்டாயிற்று. சமயத்திற்கு ஏற்றாற்போல் அவரது தாயாரும் போன இரு பேரன்களையும் காணோமே என்று முனக ஆரம்பித்தாள். பிள்ளைகள் சாப்பிடாமல் இவ்வளவு நாழி ஒரு நாளும் இருந்ததில்லையே என்று ராஜனும் கவலைப்படலானார்.

மணி சுமார் இரண்டரையிருக்கும். பங்களா வாயிலில் ஒரு கார் வேகமாக வந்து நின்றது. ராஜன் ஆவலுடன் வாயிலை நோக்கி ஓடினார். ஆனால் அடுத்த வினாடி திடுக்கிட்டு நின்றார். காரிலிருந்து ஒரு போலீஸ்காரன் பாலுவை கையில் பிடித்துக் கொண்ட வண்ணம் இறங்கினான்! பின்னால் காலேஜ் பிரின்ஸ்பாலும் ஒரு ஸார்ஜெண்டும் இறங்கினார்கள். பாலு கையில் விலங்கிடப்பட்டு அழுத வண்ணமாக இருந்தான்.

“நீர்தானா மிஸ்டர் ராஜன்” என்று வினவினார் ஸார்ஜென்ட் துரை. “ஆம்” என்றார் ராஜன், தடுமாற்றத்துடன்.

“நீர் உமது மகன்களை வளர்க்கும் விதம் வெகு அழகு! பச்சையப்பன் கல்லூரி வருடாந்திர விழாவிற்கு அக்கிராசனம் வகிக்க வந்த ஜட்ஜ் சதாசிவ ஐயர் தனது சிறு பெண்ணையும் கூட்டிக் கொண்டு வந்திருந்தார். உமது பாலுவும், ரகுவும், மற்றொரு கூட்டாளி சந்திரனுடன் அச்சிறு பெண் கழுத்திலிருந்த ஆறு சவரன் உள்ள தங்கச் சங்கிலியைத் திருடிவிட்டனர். பாலு எம்மிடம் அகப்பட்டுக் கொண்டான், மற்றிருவரும் ஓடிப்போய் விட்டனர்” என்று உரைத்தார் சார்ஜெண்ட் துரை.

ராஜனுக்குக் கால்கள் நிலைகொள்ளவில்லை. தேகம் நடுங்கிற்று. தலை கிர்ரென்று சுற்ற ஆரம்பித்தது. பணத்தில் திளைக்கும் தனது புத்திரர்களா இவ்வாறு செய்தார்கள்? என்று அவர் திகைத்தார். நம்ப முடியவில்லை. பாலு, “அப்பா! மன்னித்துக்கொள்ளுங்கள். எல்லாம் காலத்தின் கோலம்! எங்களது நண்பன் சந்திரனது துர்புத்தியால் இக்காரியம் செய்துவிட்டோம்,” என்று தேம்பித் தேம்பி அழுதான். ராஜனது அம்மாவும், மாமியாரும், சேர்ந்தாற்போல் “ஸைரன்” மாதிரி பெரிதாக ஒப்பாரி வைத்து கூட்டம் கூட்ட ஆரம்பித்தனர். அவமானம் ஓர் பக்கம், தனது மகன்கள் மீது கோபம் ஓர் பக்கம். தாங்க முடியாத படபடப்புடன் பாலுவை அறைய முன் சென்றார் ராஜன்.

ஹா! அடுத்த வினாடி அவர் வியப்புடன் நின்றார். போலீஸ் சார்ஜெண்டும், கான்ஸ்டேபிளும் தங்களது உடைகளை அகற்றி எறிந்தனர். ரகுவும் சந்திரனும் நின்றுகொண்டிருந்தார்கள்!

“வொண்டர்புல்! — உங்கள் ஆக்டிங் ரொம்ப ஜோர்! பஸ்ட் பிரைஸ் உங்களுக்குத்தான்,” என்று கை தட்டிக் கொண்டே நின்றார் பிரின்ஸ்பால் துரை. “அப்பா, மாறுவேடப் போட்டியில் எங்களுக்கு முதற் பரிசு. வேடத்தைக் காண்பிக்க வந்தால் இப்படி அடிக்க வருகிறீர்களே” என்று பாலுவும் ரகுவும் நகைக்க ஆரம்பித்தார்கள். ராஜனுக்கும் அவரது மாமியார், தாயார் ஆகியோருக்கும் வெட்கம் தாங்க முடியவில்லை! முகங்களில் அசட்டுத்தனம் ஆறுபோல் வழிந்தோடியது. பல்லை இளித்து நின்ற ராஜனையும், “மணிப்பர்ஸ்” போன்ற வாயை வைத்துக்கொண்டிருந்த பாட்டிகளையும் ரகுவும் சந்திரனும் நையாண்டி செய்தனர். எப்படி மாறுவேடம்?

## சில்பியின் கனவு

(16-ம் பக்கத் தொடர்ச்சி)

நரேந்திரனுல் கனவில் கண்ட அக்காரிகையை மறக்க முடிய வில்லை. கனவின் முடிவு என்னவோ விபரீதமானதுதான். ஆனுல் அந்த அழகி அவன் மனத்திரையில் நன்கு பதிந்துவிட்டாள். நரேந்திரன் சிற்ப மண்டபத்தை நோக்கி நடந்தான். மண்டபத்தின் ஓர் பாகத்தில் வெட்டி எடுக்கப்படவேண்டிய பெரிய பாறையொன்று காணப்பட்டது. சிற்பியின் மனத்தில் பல எண்ணங்கள் தோன்றி மறைந்தன. கையில் உளியை எடுத்தான். சொற்ப தினங்களுக்குள் அப்பாறையை கனவில் கண்ட அந்த மோஹன அணங்காக மாற்றிவிட்டான்! அச்சிலையில் பெண்மையின் அழகே உருண்டு திரண்டு காணப்பட்டது.

நகரம் மற்ருெரு முறை அமர்க்களப்பட்டது. அரசன் தெற்குப் பிரயாணத்திலிருந்து இளவரசியுடன் திரும்பிவிட்டான். அடுத்த நாள் அரசனுடைய கொலு சபை புதிய மண்டபத்தில் கூட இருந்தது. பிரதாபன் கம்பீரத்துடன் கொலு மண்டபத்திற்குள் நுழைந்தான். நரேந்திரனுடைய கைத்திறனைக்கண்டு பிரமித்தே விட்டான். கலைஞன் நரேந்திரனும் அரசன் கூடவே இருந்து யாவற்றையும் விளக்கிக் காட்டிக்கொண்டிருந்தான். எல்லாவற்றையும் பார்த்தாகிவிட்டது. வடகோடிப் பாகம் தான் பாக்கி. பிரதாபன் அவ்விடத்தை அடைந்த பொழுது அங்கு இருந்த சிலையொன்றைப் பார்த்து வியப்பும் கோபமும் அடைந்தான்.

"நரேந்திரா?" என்ருன் பற்களைக் கடித்துக்கொண்டே!

"அரசே" என்ருன் கலைஞன் பதட்டத்துடன்.

"இச்சிலையை உருவாக்கியது யார்? நீதானே?"

"என் இதய ராணியைச் சொல்லுகிறீர்களா அரசே? அவள் அடிமை அல்லவா நான்? அவளை உருவாக்க என்னைத்தவிர வேறு யாரால் முடியும்!"

நரேந்திரனுடைய வார்த்தையில் சிறிது இறுமாப்பு கலந்திருந்தது. கலைஞனுடைய இவ்வார்த்தைகள் அரசனை கடுங்கோபத்திற்கு ஆளாக்கியது.

"மடையா. யாரிடம் பேசுகிருேம் என்பதை அறிந்து பேசு. எக்குற்றத்திற்கும் ஒரு வரம்பு உண்டு என்று அறிந்துகொள். அதை மிஞ்சினுல் மரணம்தான் கிட்டும்."

அரசனுடைய கோபங்கலந்த இவ்வார்த்தை நரேந்திரனை சஞ்சலத்திற்குள் ஆழ்த்தியது. அரசனின் கோபத்திற்குக் காரணம் தெரியாமல் மனம் வெதும்பினுன். இருந்தபோதிலும் தைரியத்தைக் கைவிடாமல், "அரசே கலைஞனுக்கு எல்லையற்ற சுதந்திரம் உண்டு என்பதை மறந்து பேசுகிறீர்கள். தான் காதலிக்கும் பெண்மணியை சிலாரூபத்தில் உருவாக்க அவனுக்கு பூரண உரிமையுண்டு. இக்கொலு மண்டபத்தை உங்களுக்காகவும் அவளை எனக்காகவும் உருவாக்கினேன். இதில் என்ன தப்பிதம்?"

இவ்வார்த்தைகளைக் கேட்ட அரசனின் கோபத்திற்கு ஓர் அளவில்லை. "துரோகி அரசகுமாரியை சாதாரண நாடோடிப் பெண் என்ரு நினைத்தாய்? அவளிடமா உன் காதல் நாடகம்? இந்தா அந்த துரோகத்திற்குச் சன்மானமாக இதைப் பெற்றுக்கொள்" என்று கூறிக்கொண்டே தன் இடையில் இருந்த வாளை உருவினுன்.

அப்பொழுதுதான் நரேந்திரனுக்கு அரசகுமாரியும் தான் கனவில் கண்ட அழகிய அணங்கும் ஒரே உரு என்ற உண்மை புலப்பட்டது. எனவே பதட்டத்துடன் "ஹா! இளவரசியா அவள்? ஆனுல்..." என்று கூறி வாய் மூடும் முன்பே அவனுடைய சிரம் பிரதாபனுடைய கூர்மை மிகுந்த வாளினுல் துண்டிக்கப்பட்டு கீழே உருண்டது.

கதையைச் சொல்லிக்கொண்டே வந்த அக்கிழவன் கதை இக்கட்டத்தை அடைந்தவுடன் கதை சொல்வதை நிறுத்திவிட்டு தன் 'உக்கா'விலிருந்து புகையை நன்ருக ஒரு தடவை உள்ளே இழுத்துக்கொண்டான். "பிறகு என்னவாயிற்று?" என்று கேட்டேன் நான். அதற்கு அக்கிழவன் சொன்னுன்.

"என்னவாயிற்ரு! அரசன் முன் கோபம் மேலிட்டவனுய் நரேந்திரனின் முழு வரலாற்றையும் கேளாமல் அவனை தண்டித்து விட்டான். ஆனுல் நரேந்திரனுடைய ஆன்மா பரிசுத்தமானது. நிரபராதியான அவன் கொல்லப்பட்ட அன்றைய தினத்திலிருந்தே பிரதாபனின் ராஜ்யம் நசிக்கத் தொடங்கிற்று. அரசனும் அப்புது மண்டபத்தில் கொலு வீற்றிருந்து அரசாட்சி புரியவேண்டும் என்ற எண்ணத்தை கைவிட்டு விட்டான். அந்த இடத்தை அவன் மறுபடியும் பார்க்க விரும்பவில்லை. அதிலிருந்து இம்மண்டபம் பாழடையத் தொடங்கிற்று, பிரதாபனுக்குப் பிறகு அவனுடைய சந்ததியில் வெகு சிலரே பொன்னேரியை தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்தனர். ஆனுல் அவர்களும் அற்புதமாக நிர்மாணிக்கப்பட்ட இம்மண்டபத்தை ஏறிட்டுக் கூடப் பார்க்கவில்லை. இச்சிலாமண்டபத்தைப் பற்றி பலர் பல விதமாகப் பேசிக் கொள்ளுகின்றனர். இக்கிராமவாசிகளில் சிலர் இரவில் உளிகளின் சப்தம் காதைச் செவிடாக்கும்படி கேட்கிறது என்கிருர்கள். ஆனுல் அது எவ்வளவு தூரம் உண்மை என்று எனக்குத் தெரியாது!"

இவ்வாறு அக்கிழவன் கதையைக் கூறி முடித்தவுடன் அவனுடைய கையில் ஒரு ரூபாயைக் கொடுத்து விட்டு அம்மலைச்சாரலிலிருந்து ராஜத்துடன் கீழே இறங்கி என் கார் இருந்த இடத்தை அடைந்தேன். ஆனுல் கதையைப்பற்றின சம்பவங்களே என் மனத்தில் வேரூன்றிக் கிடந்தன. சிந்தனை உலகில் சஞ்சரித்துக் கொண்டே "ராஜம்" என்றேன். "ஏன்?" என்ருள் என் பிரியை குழையும் குரலில்.

"இக்கதை உண்மையிலேயே நடந்திருக்கும் என்று நீ நம்புகிருயா?" என்று கேட்டேன்.

"ஏன் நடந்திருக்காது? இயற்கைக்கு விரோதமாக இதில் ஒன்றும் இல்லையே!" என்ருள் அவள்.

உண்மை எப்படியோ தெரியாது! ஆனுல் அன்று இரவு நாங்கள் அவ்விடத்தை விட்டுக் கிளம்பும்பொழுது எங்கிருந்தோ வீணுகானமும் அதைத் தொடர்ந்து பல உளிகளின் சப்தமும் கேட்டாற்போல் இருந்தது.

---

ஜோதிர்மண்டலம்

# சுபானு ஸ்ரீ கார்த்திகை மீ



## விசாகம்

### ஆகாய நதி

ஓரியன் கூட்டம் அனைவருக்கும் தெரிந்ததோர் கூட்டம். அதன் தென்பாகத்திலுள்ள ரிஜல் என்னும் நக்ஷத்திரத்திற்கு மேற்கே ஆகாய நதி ஒன்று உற்பத்தியாகிறது. இந்த ஆகாய நதிக்கூட்டத்திற்கு 'எரிடானஸ்' எனப் பெயரிட்டிருக்கின்றனர். இதற்கு வடக்கே ரிஷபக்கூட்டமும், மேற்கே லீடஸ் கூட்டமும் இருக்கின்றன. இது ஒரு பெரிய கூட்டம். தென் அடிவானம் வரை இந்நதி பிரவாகிக்கின்றது. இக்கூட்டத்தில் சுமார் 300 நக்ஷத்திரங்கள் பார்வைக்குத் தென்படக்கூடியவை; ஆனால் முக்கியமாக அவைகளில் சில தவிர மற்றவையெல்லாம் 4-ம்தர, 5-ம் தர நக்ஷத்திரங்கள். ஆனாலும், இந்நதியின் பிரவாகத்தை ஓரியனின் அடி முதல் தென் அடிவானம்வரை சுலபமாக நாம் கண்டுகொள்ளலாம். அதற்கு முக்கியகாரணம் இந்நதி ஓடும் இடங்களில் கண்களுக்குப் புலப்படக்கூடிய நக்ஷத்திரங்கள் வெகு சிலவே இருக்கின்றன.

கிரேக்கக் கதைப்படி, பீடன் எனும் சிறுவன் ஒரு நாள் சூரியனின் ரதத்திலேறி, சாரத்யம் செய்ய ஆரம்பித்தான். ஆனால் சூரிய ரதத்தின் குதிரைகளை அடக்கி ஆள முடியவில்லை. சூரிய ரதம் ஒழுங்காகச் செல்லவில்லை. சில சமயங்களில் பூமிக்கு அருகில் வந்து எல்லாவற்றையும் எரித்துவிடும். சில சமயம் பூமிக்கு வெகு தூரம் சென்று, பூமியை அந்தகாரத்தில் அழுத்திவிடும். இதைக் கண்ட கிரேக்கக் கடவுள் பீடனை ரதத்திலிருந்து கீழே விழச் செய்து எரிடானஸ் நதியில் தள்ளிவிட்டதாக கிரேக்கர்கள் புராதனச் சரித்திரங்கள் கூறுகின்றன. எகிப்து தேசத்தவர்களும், அரேபியர்களும் இக்கூட்டத்தை ஒரு நதியாகக் கொண்டனர். எகிப்தியர்கள் இதை "நைல்" நதியின் அம்சமாகக் கருதினர்.

இதன் முக்கிய நக்ஷத்திரம் 'அச்செர்னர்' நதியின் இறுதியில் இருக்கிறது. முதல்தர ஒளி உள்ளது. நம் பூமியிலிருந்து 60 ஒளி வருஷத்திற்கப்பால் இருக்கிறது. சூரியன் இது இருக்குமிடத்திற்குப் பாதி தூரத்திற்குச் சென்றுவிட்டாலே நம் கண்களுக்குப் புலப்படாது. ['அச்செர்னர்' என்றால் 'நதியின் இறுதி' எனப் பெயர்.] பண்டைக் காலத்தில், இந்நக்ஷத்திரத்திற்கு வடக்கே காணப்படும் 4-ம்தர நக்ஷத்திரமொன்றையே 'அச்செர்னர்' எனப் பெயரிட்டிருந்தனர். ஆனால் நாள் செல்லச் செல்ல, அயனகதியினால் அநேக புதிய நக்ஷத்திரங்கள் தென்பாகத்தில் வெளிவந்தன. இவைகளையெல்லாம் எரிடானஸ் கூட்டத்துடன் சேர்த்தார்கள். பிறகு ஒரு முதல்தர நக்ஷத்திரம் இவ்விடத்தில் தோன்றியதும் அதற்கு 'அச்செர்னர்' என்னும் பெயரை மாற்றிவிட்டனர்.

இக்கூட்டத்தில் ஒரு அழகிய மூன்று — நக்ஷத்திரம் இருக்கிறது. இவை மூன்றும் முறையே 5-ம் தரம், 9-ம்தரம், 11-ம் தரம் ஒளி உள்ளவை. இவை மூன்றும் ஒன்றோடொன்று ஆகர்ஷண சக்தியால் இணைக்கப்பட்டவை. இந்நக்ஷத்திரம் பூமியிலிருந்து 16 ஒளி வருஷங்களுக்கப்பால் இருக்கின்றன.

இம்மாதம், எரிடானஸ் கூட்டத்தை முன்னிரவில் கிழக்கு முதல், தெற்குவரை, அடிவானத்தை யொட்டினாற்போல் காணலாம்.

### கிரஹ நிலை

புதன்:—மாத முதலில் துலாக் கூட்டதின் முடிவில் இருக்கிறது. 3-ம் தேதி யன்று (18-11-43) விருச்சிகத்தை அடைகிறது. இக் கூட்டத்தின் வழியாக ஊர்ந்து சென்று 12-ம் தேதி யன்று (27-11-43) பாம்பாட்டி கூட்டத்தைச்சேர்கிறது. பிறகு மாதக் கடைசியில் 27-ம் தேதியன்று தனுசுக் கூட்டத்தை புதன் சேர்கிறது. மாதக்கடைசியில் புதனை மேல் வானில் சூரிய அஸ்தமனத்திற்குப் பிறகு காண முடியலாம்.

சுக்கிரன்:—இம் மாத மெல்லாம் சுக்கிரன் விடியற்காலையில் கன்னிக் கூட்டத்தில் பிரகாசிப்பதைக் காணலாம். மாத நடுவில் சுக்கிரன் சித்திரா நக்ஷத்திரத்திற் கடுத்தாற்போல் காணப்படும். இதன் பிரகாசம் இதை மற்ற எல்லாக் காக்ஷிகளையும் விட உயர்ந்து விளங்கச் செய்கிறது.

சூரியஸ்தமானத்திற்கு சிறிது நேரத்திற்கெல்லாம் குஜனும் சனியும் உதயமாகின்றன. இவையிரண்டும் ரிஷபக் கூட்டத்தில் ஊர்ந்து வருகின்றன. குஜனின் செந்நிற ஒளியும், சனியின் முதல்தரப் பிரகாசமும், இவ்விரு கிரஹங்களையும் சுலபமாகக் கண்டு பிடிக்க உதவும்.

குரு:—சிம்மத்தில் இம்மாதமும் ஊர்ந்து வருகிறது. விடியற்காலையில் கிழ்வானில் உயரத்தில் குருவைக் காணலாம். இது சிம்மத்தில், மக நக்ஷத்திரத்திற்கருகே பிரகாசிக்கின்றது.

உரானஸும், நெப்டியூனும் முறையே ரிஷபத்திலும், கன்னியிலும் ஊர்ந்து வருகின்றன.

சிறுவர் பகுதி

# பால்கன்-ஜீ-பாரீ

★

[அகில பாரத பாலர் சங்கத்தின் ஆதரவில் நடத்தப்படுவது.]

அன்பார்ந்த
சகோதர சகோதரிகளே!

வாரந்தோறும் தபால்காரன் கட்டுக் கட்டாக உங்கள் கடிதங்களைக் கொண்டு வந்து கொடுக்கும்போது எனக்கு எவ்வளவு சந்தோஷம் வரும் தெரியுமா? அப்பொழுது பார்க்க வேண்டும் என் முகத்தை. சந்தோஷம் பொங்கிக் கொண்டு வரும். புன்சிரிப்பு வெகு நேரம் தவழ்ந்து விளையாடிக் கொண்டிருக்கும். ஆனால் பல காரணங்களினால், கடிதங்களுக்கு உடனேயே பதில் எழுத முடிகிறதில்லை. அதற்காக என்னிடம் கோபம் கொள்ளாமல், என்னை மன்னிப்பீர்கள் என்று நம்புகிறேன். கூடிய வரையில் சீக்கிரமாகவே பதில் எழுத முயற்சிக்கிறேன்.

"புஷ்பா"வை நீங்கள் தவறாமல் படிக்கிறீர்களா? "புஷ்பா" மாதந்தோறும் வெளிவரும் ஒரு ஆங்கிலப் பத்திரிகை. (இதை புதிய வாசகர்களுக்காக எழுதுகிறேன்.) பல குட்டிக் கதைகளும், பாட்டுக்களும், சித்திரங்களும், வேடிக்கைகளும் அடங்கிய அழகான பத்திரிகை. ஆங்கில ஞானம் சிறிது இருந்தால் போதும். எளிதில் படித்து இன்புறுவீர்கள். அதற்கு வருஷ சந்தா 3 ரூபா தான். பிரதி ஒன்றுக்கு விலை 4 அணா. "மானேஜர், 'புஷ்பா,' 31 த்ரிபுவன் ரோட், பாம்பே, 4" என்ற விலாசத்துக்கு உடனேயே $4\frac{3}{4}$ அணா ஸ்டாம்பாக அனுப்பி, "புஷ்பா"வை வருவித்துப் பாருங்கள்.

"சிறுவர் பூங்தோட்டம்" என்று பொருள்படும் பால்கன்-ஜீ-பாரீ சங்கத்தின் கொள்கை, விளையாட்டின் மூலம் சிறுவர்களுடைய அறிவை வளர்ப்பதுவே. "பாரீ"யில் சேருவதற்கு ஒரு நிபந்தனையும் கிடையாது. ஜாதி, மத, நிற, வேறுபாடின்றி எல்லாரும் சேரலாம். ஆண்களுக்கும் பெண்களுக்கும் சம உரிமைகள் உண்டு. 12 வயதுக்கு உள்பட்டவர்கள் 4 அணா பிரவேசக் கட்டணம் செலுத்தி அங்கத்தினர்கள் (மெம்பர்கள்) ஆகலாம். இன்று பிறந்த குழந்தையும் கூட மெம்பராகச் சேரலாம். வயது 12க்கு மேலும் 16க்கு கீழுமானால் 8 அணா கொடுத்து "தோழர்கள்" (கம்பானியன்) ஆகலாம். 16 வயதுக்கு மேற்பட்டவர்கள் குறைந்தது 1 ரூபா கொடுத்து 'துணைவர்களா'க (அஸோஸியேட்)ச் சேரலாம். பிரவேசக் கட்டணம் மாத்திரம் செலுத்தினால் போதும். பிறகுவேறொன்றும்கொடுக்க வேண்டியதில்லை. சங்கத்தின் "பேட்ரன்" (ஆதரிப்போர்) ஆக விரும்புவோர் குறைந்தது 10 ரூபா நன்கொடையளிக்க வேண்டும்.

"பாரி"யில் சேர விரும்புவோர் $\frac{3}{4}$ அணா ஸ்டாம்பு வைத்து "தாதா"வுக்கு (தாதா, குலிஸ்தான், கார், பாம்பே 21) எழுதவும்.

நீங்கள் மட்டும் சேர்ந்தால் போதாது. உங்களுடைய நண்பர்களையும் சேரச் சொல்ல வேண்டும். உங்கள் ஊரில் "பாரீ"யின் கிளை ஒன்றை ஸ்தாபிக்கவும் முயல வேண்டும். இந்தியாவில் ஒவ்வொரு கிராமத்திலும் "சிறுவர் தோட்டத்"தை அமைக்கப் பாடுபட வேண்டும்.

* * * *

"ஒரு சின்னக் கணக்கு. ஒரு நிமிஷத்தில் விடை சொல்ல வேண்டும்.

ராமன் கடைக்கு 7 அணா கொண்டு போனான். 2 அணாவுக்கு 3 வீதம் மாம்பழங்களும், அரை அணாவுக்கு ஒன்றாக வாழைப் பழங்களும் வாங்கினான். 7 அணாவும் செலவாயிற்று, எத்தனை மாம்பழங்கள் வாங்கினானோ அத்தனை வாழைப் பழங்களும் வாங்கினான். அவன் வாங்கின வாழைப் பழங்கள் எத்தனை? மாம்பழங்கள் எத்தனை?"

சகோதரன் ரமணன், (13-வயது, ஆற்றிங்கல்)

எல்லாவருக்கும் என் அன்பு

சகோதரன் ஹரி.
"ஷாலிமர்"
தைக்காடு,
திருவனந்தபுரம்.

அட்டைப் படம்

★

"கிருஷ்ணப்ரேமா"
தெலுங்குப் படத்தில்
ராதையாக நடிக்கும்
சாந்தகுமாரி

## நிலாவும் விருந்தும்

(10-ம் பக்கத் தொடர்ச்சி)

சுவைத்துச் சுவைத்து அனுபவித்துப் பாருங்கள்.

### செவி-விருந்தும் கண்-விருந்தும்

இப்பாட்டு என்னும் மாய விருந்தை அனுபவிக்கும்போதே, நீங்கள் வெண்ணிலவிலே காதலனது பிரிவாற்றுமல் தவித்துக்கொண்டிருக்கும் காதலியையும், அவளது நெஞ்சிலே நீங்காது குடிகொண்டிருக்கும் காதலனையும், அவனது மன்மத சொரூபத்தையும், வீர பராக்கிரமங்களையும், பக்திப் பெருக்கையும், சித்த வசீகரண சக்திகளையும், அவனுக்கே தன்னை உரிமையாக்கிய கட்டழகியின் மாசற்ற உள்ளத்தையும், அவ்வுள்ளத்திலே கரைபுரண்டோடும் காதல் — வெள்ளத்தையும் மனக்கண் முன் பிரததியட்சமாகப் பார்க்கிறீர்களல்லவா?

---

## நாடோடிப் பாட்டு

(12-ம் பக்கம் தொடர்ச்சி)

அணிந்ததெல்லாமிரவல்
பாடையு மிரவலடி — தங்கமே
பறையனைச் சேருமடி—
ஞானத்தங்கமே
பறையனைச் சேருமடி.

அந்தப் பிணத்தை
அலங்காரஞ்செய்து
இந்தப் பிணங்களெல்லாம்—
தங்கமே
ஏதுக் கழுகுதடி-ஞானத்தங்கமே
ஏதுக் கழுகுதடி.

சேத்த பிணத்தைச்
சீரா யலங்கரித்துச்
சாகும் பிணங்களெல்லாம்—
தங்கமே
சாய்ந்து விழுகுதடி—
ஞானத் தங்கமே
சாய்ந்து விழுகுதடி.

தவத்துக் கொருவரடி
தமிழுக் கிருவரடி
சவத்துக்கு நால்வரடி—தங்கமே
ஜகத்தில் வழக்கமடி—
ஞானத்தங்கமே
ஜகத்தில் வழக்கமடி
உடலை நினைந்து
ஒழியா தழுதவரும்
சுடலை நெருங்கி விட்டால்—
தங்கமே

சொல்லாமல் போவாரடி—
ஞானத்தங்கமே
சொல்லாமல் போவாரடி.

பெற்றோர் பௌத்திரரும்
பெண்டிர் சகோதரரும்
உற்றோர் உறவினர்கள்—தங்கமே
ஓட்டம் பிடிப்பாரடி—
ஞானத்தங்கமே
ஓட்டம் பிடிப்பாரடி

நீரிருந்தா லேரியிலே
நீர்ப்பறவை மேத்தவுண்டு
ஏரியிலே நீரோழிந்தால்-தங்கமே
ஏதொன்றும் நில்லாதடி—
ஞானத்தங்கமே
ஏதொன்றும் நில்லாதடி.

எல்லாம் யார் செயல் ? அவரே சொல்கிறார்.

ஆட்டிவைக்கும் ஐயன்செயல்
ஆரறிய வல்லவர்கள்
சாட்டையில்லாப்
பம்பரம்போல்—தங்கமே
ஜகமெங்கும் ஆடுதடி—
ஞானத்தங்கமே
ஜகமெங்கும் ஆடுதடி.

நூறல்ல இருநூறல்ல; ஆயிரங் கண்ணிகளை-இதேமாதிரி ஞானமார்க்கமான கண்ணிகளைத் தமிழ் நாட்டில் தேடித்தொகுத்தால் பெறலாம். சில பாடல்கள் என்ன என்னவோ பேருடன் அச்சாகியிருக்கின்றன; ஆனாலும் இலக்கிய ரஸிகர்களுடைய பார்வைக்கு அவை இன்னும் வரவில்லை.

# லக்ஷ்மி கடாக்ஷம்



நாகர்கோயில்
**ஸ்ரீ கே. மகாதேவன்**

"என்ன உங்களைத்தானே! இப்படி பேசாமல் உட்கார்ந்திருந்தால் வயிறு நிறையுமா? வாய் நிறையுமா? நாளைய சாப்பாட்டுக்கு நாமும் ஏதாவது வழி பார்க்கவேண்டாமா? என்றாள் கல்யாணி.

"எனக்கொரு வழியும் தெரியவில்லை, நீதான் சொல்லேன்." என்று திருப்பிக்கேட்டேன்.

"வழி என்ன... என்னுடைய முத்துமாலையை விற்றுச் சாப்பிடவேண்டியதுதான்" என்றாள் அவள்.

நான் ஆச்சர்யமடையவில்லை. ஏனெனில் எங்களுடைய தினசரி வாழ்க்கையே ஒவ்வொரு நகையையும் விற்ற பணத்தால்தான் கழிகிறது. கல்யாணியின் நகைகளை எல்லாம் விற்று சாப்பிட்டாய் விட்டது. மிஞ்சினது அந்த இரண்டு வடம் முத்து மாலைதான். அதைத்தான் அவள் விற்கச் சொன்னாள். மற்ற நகைகளைப் போல் அதையும் விற்று விடுவேன். ஆனால்...அது என் அன்பின் அடையாளம் என்பதை நினைத்தபோதுதான் எனக்குச்சற்று வருத்தமாயிருந்தது. அந்தப் பழைய சம்பவம் என் ஞாபகத்திற்கு வந்தது.

அப்போதுதான் நாங்கள் தனிக் குடித்தனம் ஆரம்பித்திருந்தோம்.

வாழ்க்கையின் இன்பகரமான கட்டத்தை அடைந்திருந்தோம். அதோடு எனக்கு வேலையும் கிடைத்து விட்டது. பிறகு கேட்பானேன் சந்தோஷத்திற்கும், மகிழ்ச்சிக்கும்? என்னுடைய முதல்மாத சம்பளத்தையும் ஏற்கனவே கொஞ்சம் சேர்த்து வைத்திருந்த பணத்தையும் கொண்டுதான் அந்த மாலையை வாங்கினேன்.

அன்று அவள் தடபுடலாக அலங்காரம் பண்ணிக்கொண்டு ஊர்வசி மாதிரி காட்சியளித்தாள். வீடுமுழுவதும் சந்தோஷத்தால் நிரம்பி இருந்தது. அந்த இன்பகரமான வேளையில் என் முழு அன்போடும், ஆசையோடும் அளித்த முத்துமாலையைத்தான் இன்று விற்கச் சொன்னாள். என்ன செய்யலாம்,

காலக்கிழவா — பொறுத்திடுவாய்
கால்க்ஷணம்—சகடம் நிறுத்திடுவாய்

என்றால் நிறுத்திவிடுவானா. அவனுடையவேகத்திலே ஜப்பானிய யுத்தம் வந்தது. என் ஜோலியில் இடிவிழுந்தது; எங்கள் சோற்றிலும் மண் விழுந்தது. பேசாமல் ரெங்கூனிலிருந்து ஊருக்கு வந்து சேர்ந்தோம். ஆனந்தமயமாயிருந்த எங்கள் வாழ்வில் துக்கம் என்னும் இருள் சூழ்ந்தது.

## 2

முத்து மாலையை விற்ற பணத்தைக் கொண்டு மூன்று மாதம் ஓட்டினோம். அதற்கப்புறம் அதே பழைய நிலைமைதான். அன்றாட சாப்பாட்டுக்கே திண்டாடும் நிலைமை வந்துவிட்டது.

அன்றையதினம் கையில் காலணாக் கூடக் காசில்லை—ஒன்றும் தோன்றாமல் உட்கார்ந்திருந்தேன். அப்போதுதான் அந்த யோசனை தோன்றிற்று. கல்யாணி இங்கே வா என்றேன்.

அவள் வந்தாள்.

மலர்ந்த ரோஜா புஷ்பம் போன்ற அவளது முகம் வாடி வதங்கிப்போயிருந்தது.

"கல்யாணி இன்னும் எவ்வளவு நாள்தான் இப்படி கஷ்டப்படுவது? பேசாமல் லக்ஷ்மியை விற்று விடுவோம், அதுதான் நல்லது என்றேன்.

"என்ன என்று நடுங்கிக் கொண்டே கேட்டாள். நீர் மல்கிய அவள் கண்கள் அப்போது ஆச்சர்யத்தால் மலர்ந்தது.

"ஆமாம்.........லக்ஷ்மியை விற்கத்தான் வேண்டும்" என்றேன்.

"வாஸ்தவமாகவா? நம்முடைய அகத்திற்கே அதுலக்ஷ்மியாச்சே! எந்த கஷ்டத்திலும் நம்மை கைதூக்கி விடுமே." ஐயோ......அதையா விற்க வேண்டும்?

பின் என்ன செய்வது. பார். இரண்டு நாளா அது முழுப் பட்டினி. நாமாவது எப்படியேனும் பிழைத்துக் கொள்ளலாம். ஆனால் அது ஒருவாயில்லாப் பிராணி, மகா சாதுவான பசு, பாவம் அது என்ன கஷ்டப்படுகிறதோ—நம்மிடமிருந்தால் அதற்கு இன்னும் கஷ்டந்தான்—

"அதற்காக விற்பானேன்?"

"விற்றால் அது இன்னொருவனிடம் போயாவது சுகமாயிராதா?-வயிறார உண்ணாதா?

அவள் பதிலே பேசவில்லை. சிறு குழந்தையைப் போல் விம்மி விம்மி அழுதாள்.

"ஐயோ விற்ற நகைகளையாவது திரும்ப வாங்கலாம்! ஆனால் போன லக்ஷ்மி திரும்ப வருமா? இனிமேல் நம் ஜென்மத்திலும் அந்த மாதிரி பசு

கிடைக்குமா. அதுவும் வந்தது. உங்களுக்கு வேலை கிடைத்தது. எனக்கு நகைகள் வந்தன; ஆத்தில் சந்தோஷம் தாண்டவமாடியது. நம் ஆத்திற்கே அது லக்ஷ்மி ...ஐயோ... அதையா விற்க வேண்டும் என்று கூறிக் கூறி அழுதாள்.

உண்மையிலேயே லக்ஷ்மி ஓர் அற்புதமான பசு தான். காமதேனு என்றாலும் அதற்குத் தகும். பால் போன்ற நிறம், அழகான கொம்புகள், மகா சாது. சிறு குழந்தைகள் கூட பக்கத்தில் போகலாம். ஒன்றும் செய்யாது. அவள் சொல்வது போல் அது எங்கள் வாழ்விற்கே ஒரு லக்ஷ்மி தான். அது வந்த பிறகு எங்கள் வாழ்க்கையிலே ஐச்வர்யம் பொங்கிற்று. என்னையும் கல்யாணியையும் தன் மதுரமான புஷ்டியுள்ள பாலினால் எவ்வளவோ வியாதிகளிலிருந்து குணப்படுத்தி இருக்கிறது. லக்ஷ்மி என்று கூப்பிட்டால் போதும். எங்கிருந்தாலும் சரி அம்மா என்று அலறிக் கொண்டே ஜில் ஜில் என்று சலங்கை ஒலிக்க ஓடி வந்துவிடும்-அப்படிப்பட்ட காமதேனுவைத் தான் இன்று விற்கும் நிலைமை வந்திருக்கிறது.. விதி, எங்கள் ஐச்வர்யத்தை எங்களிடமிருந்து பிரிக்க இன்று சதி செய்கிறது...

## 3

அதிகம் சொல்வானேன்? கடைசியில் லக்ஷ்மியை எழுபது ரூபாய்க்கு விற்று விட்டேன். விற்கும் தினத்தில் அது எங்களை விட்டுப் பிரிய மறுத்தது. அம்மா, அம்மா என்று அலறிற்று. கல்யாணி ஹோ வென்று கதறி விட்டாள். அதை வாங்கினவன் எவ்வளவோ இழுத்துப் பார்த்தும், லக்ஷ்மி தன் இடத்தை விட்டசைய மறுத்து விட்டாள். பளீரென்று ஒரு அடி அடித்தான். அடபாவீ, அடிக்காதேடா என்று கல்யாணி கூச்சலிட்டாள்...பிறகு, நானே அதைப் பிடித்துக் கொண்டு அவன் வீட்டில் விட்டு விட்டு வந்தேன். அதைப் பிடித்துக் கொண்டு போகும்போது கல்யாணி அழுத அழுகைக்கு ஓர் அளவே இல்லை. லோகிதாசனை இழந்த சந்திரமதியைப் போலிருந்தது அவள் தோற்றம்.

லக்ஷ்மியை கொண்டு விட்டு விட்டு, வீட்டுக்கு வந்தேன். கல்யாணி கீழே படுத்திருந்தாள். அழுதழுது அவள் முகமெல்லாம் வீங்கியிருந்தது. அந்த நிலைமையில் அவளிடம் பேசித் தொந்தரவு செய்யலாகாதென்று நானும் பேசாமல் இருந்து விட்டேன். அதே சமயம் வாசல் பக்கத்தில் அம்மா அம்மா என்று லக்ஷ்மியின் அலறல் சப்தம்கேட்கவே நான்ஓடிச் சென்றேன். கல்யாணியும் ஓடி வந்தாள். லக்ஷ்மி இரைக்க இரைக்க நின்று கொண்டிருந்தது. அதை வாங்கினவனும் பின்னால் வந்தான். "என்ன சாமி இது! என்ன பசு? சும்மா ஓடிக்கிட்டேயிருக்கு" என்றான் கோபத்தோடு. லக்ஷ்மியைப் பார்த்தேன்.

பால்போன்ற அதன் கழுத்திலும் வயிற்றிலும் அடிபட்டு தோல் பிய்ந்து ரத்தம் கசிந்து கொண்டிருந்தது. கண்களில் நீர் வடிந்தது. என்னுடைய கால்களில் தன் சிரசை உரசி "அம்மா" என்று ஈனஸ்வரத்தில் சப்தமிட்டது. அவ்வளவு தான் என் ஹிருதயம் தூள் தூளாகச் சிதறி விட்டது. லக்ஷ்மி உன் அருமை தெரியாமல் உன்னை விற்று விட்டேன். ஐயோ வலிய வந்த ஸ்ரீதேவியை உதறித் தள்ளுவது போல் உன்னையும் தள்ளினேன். நான் மகா பாவி. உனக்கு இவ்வளவு கொடுமை செய்தாலும் நீ அதை மனதில் வைக்காமல் திரும்பவும் எங்களிடமே வந்து விட்டாய். ஐயோ உனக்கிருக்கும் யோக்யதை கூட எனக்கில்லையே லக்ஷ்மி. இனிமேல் என்ன துன்பம் வந்தாலும் உன்னை பிரிய மாட்டேன், உன்னை மறக்க மாட்டேன். இது சத்தியம். கல்யாணி உள்ளே சென்று அந்த எழுபது ரூபாயையும் எடுத்து அவனிடம் கொடுத்து விடு. லக்ஷ்மி வா என்று கதறினேன்.

சந்தோஷம் தாங்கமாட்டாமல் ஜில் ஜில் என்று சலங்கை ஒலிக்க ஆடி அசைந்து கொண்டே உள்ளே வந்தாள் அந்த மகாலக்ஷ்மி. லக்ஷ்மி வந்தவுடன் மீண்டும் எங்களுக்கு அவளது கடாக்ஷம் திரும்பியிருக்கிறது!

---





# நாகரிக வாழ்க்கை

ஸ்ரீமதி தங்கம்மாள் பாரதி

எல்லாரும் காலை வேளையைச் சிறந்தது என்கிறார்கள். கவிகள் காலை நேரத்தைப் புகழ்கிறார்கள். சூரியோதயத்தின் அழகுக்கு எல்லையே கிடையாது என்கிறான் கவி. ஞானியோ அஞ்ஞானத்தைப் போக்கும் நேரம்-இருள் அகன்று ஒளி தோன்றும் நேரம். அகமும் புறமும் பரிசுத்தமடையும் நேரம் என்று மகிழ்கிறான். பிரத்யக்ஷமாகக் காணும் தெய்வம் சூரியன் என்று இயற்கைப் பித்தன் கூறுகிறான். நம் முன்னோர் காலை நேரத்தில் கண் விழித்து மனமும் உடலும் பரிசுத்தமடைய ஆற்றங்கரைக்குச் சென்று சுத்த ஜலத்தில் ஸ்நானம் செய்து இறைவனைத் தொழுது, தத்தமக்குரிய தொழிலைச் செய்து சரீர ஆரோக்யம் பெற்று தீர்க்காயுளுடன் வாழ்ந்து வந்தனர். நாமோ?......இப்போதைய இந்தியர்களாகிய நாமோ... "சொல்லவுமே நாவு துணியவில்லை."

கடவுளை விட காப்பியைச் சிறந்த பொருளாக மதிக்கிறோம். காப்பிக்காக எத்தகைய கஷ்டங்களையும் சகிக்கத் தயாராயிருக்கிறோம். எந்தத் தியாகத்திற்கும் தயார் ஒருகப் காப்பிக்காக. ஒவ்வொரு வீட்டிலும் தினம் காப்பிக்காக—அக்கப் போர் நடக்கிறது. ஓரிரண்டு மாதிரி ஸீன் எழுதுகிறேன்.

நாராயணன் 'ஷாஹர்' கம்பெனியில் ஒரு குமாஸ்தா. அவனுக்கு ஆபீஸ் ஒன்பது மணிக்கு. ஆனால் வீட்டைவிட்டு எட்டரைக்கே புறப்படவேண்டும். மணி ஐந்து அடித்தது! ஆறும் ஆச்சு; ஏழும் ஆச்சு. அவன் மனைவி இன்னும் படுக்கையை விட்டே எழுந்திருக்கவில்லை. அவனுக்கு வந்த பெருங்கோபத்தை அடக்கிக் கொண்டு நேராகச் சமையல் அறைக்குச் சென்றான். 'ஸ்டௌவ்'வை எடுத்து மூட்டி காப்பிக்கு ஜலம் போட்டான். பின்பு காப்பிக்கொட்டையை காப்பி மெஷினில் போட்டு அறைத்தான். கொர்...கொர்... என்று அறைக்கும் சத்தங் கேட்டு அவன் மனைவி சுவர்ணம் எழுந்து ஓடிவந்தாள். அவன் அவளைத் துளி கூட கவனியாமல் வேலையிலேயே கண்ணாயிருந்தான். அவள் அவனைப் பார்த்து, "ஏன்னா, என்னை எழுப்பக் கூடாதா?" என்று சொல்லிக்கொண்டு சமையல் செய்வதற்கு அடுப்பை மூட்டினாள். அவன் உடனே, "அடியே இந்தக் காப்பிக்கொட்டையை அறை நான் போகிறேன் என்றான். அதற்கு சுவர்ணம் ஏ! அப்பா ... என்ன கோபமடா ஒரு நாளைக்குக் காபி போட்டதற்கு. எனக்குக் காய்கறி நறுக்கவேண்டும். நீங்களே பாக்கியையும் கொஞ்சம் அறையுங்கோளேன்! எனக்கு எட்டரை மணிக்குள் சமையல் ஆகவேண்டாமா?" என்றாள். உடனே நாராயணனுக்கு வந்த கோபம் தாங்க முடியவில்லை. "சீ!...கழுதை! எட்டு மணிக்கு எழுந்திருக்கிறது. அப்புறம் என்னை ஏவுகிறது என்று ஆத்திரத்துடன், அவள் முதுகில் ஓங்கி ஒரு அடி வைத்தான். பின் பல் தேய்க்கச் சென்றான். சற்றுநேரங் கழித்துத் திரும்பிவந்து பால்காரன் ஏன் இன்னும் வரவில்லை. அவனைச் சீக்கிரம் கொண்டுவரச் சொல்வதற்கென்ன? என்று எரிந்து விழுந்தான். அதற்கு ஒரு பதிலும் வரவில்லை. சுவர்ணம் பதிலே சொல்லவில்லை. ஒரு டம்ளரில் காப்பி கலந்துகொண்டு வைத்தாள். அதை அவன் மனம்



"ஏன்னா, என்னை எழுப்பக் கூடாதா" என்று சொல்லிக்கொண்டே சுவர்ணம் எழுந்திருந்து வந்தாள்.

இல்லாமல் கோபத்துடன் குடித்தான். * காப்பி குடித்தவுடன் கோபமும் கொஞ்சம் அடங்கிற்று (இனி கதாநாயகன் மொழியாகவே எழுதுகிறேன். ஏனென்றால் அநுபவத்தோடு சொன்னால் சுவைக்குமளவு மற்றவர் சொன்னால் சுவையிராது) பின்பு சோற்றை கடனே என்று கொட்டிக்கொண்டு ஆபீஸுக்கு ஓடினேன். ஆபீஸில் என் கவனம் செல்லவேயில்லை. ஒரு வேலையும் ஓடவில்லை. ஏன் வீணாக சுவர்ணத்தைக் கோபித்துக் கொண்டோம்? அவளுக்கு எவ்வளவு கஷ்டமாயிருந்திருக்கும்? அவளும் என்மேல் கோபம் கொண்டிருப்பாள். இதெல்லாம் ரொம்ப அனாவசியம். இனிமேல் இவ்விதம் கோபித்துக் கொள்ளக் கூடாது என்று நினைத்துக் கொண்டேன். மாலை ஐந்து மணிக்கு வீட்டிற்கு வந்தேன் சுவர்ணத்திடம். ஒரு வார்த்தையும் பேசவில்லை. அவளும் ஒன்றும் பேசாமல் காப்பி போட்டுக் கொண்டிருந்தாள்.

நான் ஷர்ட்டு, கோட்டு எல்லாவற்றையும் கழற்றி விட்டு, கை கால் சுத்தி செய்து கொண்டு ஈஸிசேரில் சாய்ந்தேன். பொழுது போவதற்காக ஒரு நாவலைப் புரட்டிப் பார்த்துக் கொண்டிருந்தேன். ஆனால் ஒரு வரியில் கூட என் மனம் செல்லவில்லை. சுவர்ணம் மிகவும் கோபித்துக் கொண்டு விட்டாளே பாவம்... அவள் முகம் என்னவோ மாதிரியிருக்கிறது. அவளை எவ்வாறு சமாதானம் செய்வது? முதலில் நாமாகப் பேசுவதா? அல்லது அவள் ஏதேனும் கேட்ட பின் பேசுவதா?என்றெல்லாம்நினைத்தேன். பின்பு சினிமாவிற்குக் கூட்டிக் கொண்டு போகலாம், அது தான் சரியான வேலை, என்று தீர்மானித்துக் கொண்டேன். சுவர்ணம் ஒரு கையில் ஜலமும், மற்றொரு கையில் டிபனும் எடுத்துக் கொண்டு வந்து என் முன்னால் வைத்து விட்டுக் காப்பி எடுத்துக் கொண்டு வர உள்ளே போய் விட்டாள். காப்பி கொணர்ந்தாள். நான் என் கௌரவத்தை விட்டுக் கொடுக்காமல் "எனக்கு ஒன்றும் வேண்டாம். எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு போ" என்றேன். அவள் ஏன்? என்ன காரணம்? என்றாள். பழையபடி நான் காலைச் சண்டையைக் கிளப்பினேன். உடனே சுவர்ணத்திற்கு இத்தனை நேரம் அடக்கி வைத்துக்கொண்டிருந்த அழுகை வந்து விட்டது. விக்கி விக்கி அழுதாள். உங்கள் வசவை பொறுக்க முடியவில்லை. ஏன் என்னை அனாவசியமாய்ச் சண்டைக்கு இழுக்கிறீர்கள் என்று சொல்லிக் கொண்டு அழுதாள். என் மனம் இளகிவிட்டது. உடனே சுவர்ணத்தினிடம் அன்பாகப் பேசி சமாதானப்படுத்தினேன். அவள் முகம் வெற்றியினால் மலர்ந்தது. பின்பு அவளை சினிமாவுக்கு அழைத்துச் சென்றேன். சினிமா முடிந்து வீட்டுக்கு வந்து அதைப்பற்றி விமர்சனம் செய்யும் சமயம் சுவர்ணம் எப்போதும் புருஷர்களுக்கு வலுவில் சண்டைக் கிழுப்பது தான் சுவபாவம் போலும். சினிமாவிலும் இதே தான். வலுச்சண்டை போடுவது, பின்பு கெஞ்சிக் காலில் விழுவது என்று எனக்கு ஒரு டோஸ் விட்டாள். நான் ஒரு அசட்டுச் சிரிப்பு சிரிப்பதைத் தவிர வேறென்ன செய்ய முடியும்.........

இதெல்லாம் பத்து வருஷத்துக்கு முன். சுவர்ணம் என்வீடு வந்ததும் நடந்த விஷயம். இன்று வீடு நிறையக் குழந்தைகள். பெரிய பெண் விஜயாவுக்கு வயது 16. சின்னப் பெண் சாந்தாவுக்கு 12. பிள்ளை சுந்தரத்திற்கு 14-வயது. மற்றவர்களைச் சொல்வதில் பிரயோசனமில்லை. 12-வயதிலிருந்து 1-வயது வரையுள்ள சிறு குழந்தைகளைக் கணக்கிட்டு என்ன பிரயோசனம்? இன்றும் அதே போல் காலை வீட்டில் ஒருவரும் எழுந்திருக்கவில்லை. மனைவி ஆத்திரத்தோடு இரைச்சல் போட்டாள். அந்த மூதேவி சமையல்காரி ஊருக்குத் தொலைந்த பின் காப்பி கிடைப்பதே கஷ்டமாய்விட்டது. பால்காரனுடைய தொந்திரவோ சொல்லி முடியாது! நம் வீட்டுக் கதவைத் தட்டி விட்டு நாம் திறக்கு முன்பே பால் தகரத்தோடு ஆஜராய் விடுகிறான். பால் கங்காமிருதம் தான். நாம் சற்று மெதுவாகக் கதவைத் திறந்தால், அதற்குமுன் ஓட்டலுக்கு ஓடி விடுகிறான், எனக்கோ காலைக் காப்பி சாப்பிடாவிட்டால் படுக்கையை விட்டு எழுந்திருக்க முடியவே இல்லை. பெரிய பெண் இருந்து தான் பிரயோசனம் என்ன? நீங்கள் தான் சற்று கூஜாவைக் கொண்டு போய் ராமய்யர் ஹோட்டலில் போய் கொஞ்சம் காப்பிவாங்கிண்டு வாருங்கள் என்று உத்தரவிட்டாள். என் மனவேதனையோ சொல்லி முடியாது. ஹோட்டல் ராமய்யருக்கு ஏற்கெனவே 100 ரூ. கொடுக்க வேண்டும். தடித் தடியாகப் பெண்ணும், பிள்ளையும் உலக்கை மாதிரிப் பெண்டாட்டியுமிருக்கும் போது, நான் இப்படிக் கஷ்டப்பட என் தலையில் எழுதினான் ஈசுவரன். என்ன ஆச்சரியம்! அடுப்பை மூட்டினால் இவர்களுக்கென்ன உடம்பு கெட்டு விடுமா? இவர்கள் சொல்லைக் கேட்டு, இவர்கள் ஸௌகர்யத்திற்காக, அல்லும் பகலும் பாடுபட்டு உழைத்து, இத்தனை வருஷம் சம்பாதித்தும் இன்றைய தேதியில் கையில் தம்பிடி காசு கூட கிடையாது! நாகரீகம்! நன்றாயிருக்கிறது!

## நாக கன்னிகை

(-8ம் பக்கத்தொடர்ச்சி)

தென்பட்டது. அன்று மாலையில் சோழனுல், நாக கன்னிகைக்குக் கொடுக்கப்பட்ட தேர்அது.நீலன் அதைக் கண்டதும் மனம்கொதித்தான். சிறிது வெறுப்பும் கொண்டான். அதைப் பார்க்கவும், அவன் மனம் விரும்பவில்லை.

மனக் கலக்கம்:
உறக்கமில்லை

மீண்டும் தன் குடிலுக்குள் புகுந்தான். எவ்வளவு முயன்றும் உறக்கம் வரவில்லை அவனுக்கு. சிந்தனை மிகுந்து அவனைத் துன்புறுத்தியது. குடிலுக்குள் அங்கும் இங்கும் உலாவியவாறே இருந்தான். கால்களும் சோர்ந்தன. நீண்டநேரம் விழித்திருந்தமையால் களைப்பும் உண்டாயிற்று; உறக்கம் இல்லை. மனக்கலக்கத்துடனே மெல்ல மஞ்சத்தில் அமர்ந்தான்.

சோலைகள் எங்கும் 'சல சல' என்று மரங்கள் ஓசைசெய்து உராய்ந்தன. திரைக்குடில்களின் திரைகள் படபட வென்று அடித்து எதிரொலியிட்டன. அலைத்தொகுதிகள் எல்லாவற்றிற்கும் மேலாகப்பேரிரைச்சல் செய்தது. அவ்வளவு முழக்கத்திற்கும் எதிராக மிக அமைதியுடன் மாந்தரின் தொகுதி மதி மயங்கிய உறக்கத்தில் ஆழ்ந்திருந்தது. அன்பையும் குளிரச்செய்யும் தன்மையாக நிலவு குளிர்ந்து வீசியது. எங்குநோக்கினும் வெள்ளியை உருக்கி வார்த்தாற்போன்ற வெள்ளொளிப்பரப்பு, கண்ணைக் கவர்ந்தது. இந்நிலையில், ஓர் உருவம், மனித உருவம் இளமையும் வனப்பும் வீறுபெற்ற ஆண்வடிவம் அந்தச் சோலையில் ஒரு குடிலின் திரையை மெல்ல அகற்றியது. அந்தக் குடில் நாககன்னிகை மெய்ம்மறந்து உறங்கும் குடில் என்பதை உரைக்க வேண்டுமோ?

நாககன்னிகையின்
குடிலில்

குடிலின் திரையை அகற்றிய வடிவம், மெல்ல உள்ளே புகுந்தது; பஞ்சில் அடி வைப்பது போல், நிலத்தில் பாதங்களைப் பதிய வைத்துச்சென்றது அவ்வடிவம். அவ்வடிவம் யாருடையது எது குறித்து அங்கு அவ்வடிவம் புகுந்தது—என்பதை எவ்வாறு உணர முடியும்? நாககன்னிகை அயர்ந்து உறங்கினுள். அவள் அருகில் சென்றது அவ்வடிவம்; என்ன துணிவு! எவ்வளவு நிர்ப்பயம்? ஆனுல் அவ்வடிவம், எவ்வளவு பயத்துடனும் இருதயத்துடிப்புடனும் அங்கு புகுந்ததோ, யாரறிவார்? விளக்கின் மங்கிய ஒளியிலும் நிலவின் வெண்கதிரிலும் நன்கு, நாக கன்னிகையின் தோற்றம் புலப்பட்டது. அவள் அழகை, இளமையின் புதுமை வீறு பொங்கிய அவள் அங்கங்களைக்கண்களால் ஆர்வமுடன் நோக்கியது அவ்வடிவம். அதுமட்டுமல்ல; அவ்வடிவத்தின் கரங்கள், அவள் பாதங்களைத் தொடுவதற்குத் துணிந்தும் துணியாமலும் தயங்கி நடுங்கின. அது ஏனோ? அவ்வளவு துணிவு கொள்வதற்கு அவ்வடிவம் யாரரோ? காந்தம் ஊசியை இழுப்பதுபோல் அவள் அழகு, அவன் உள்ளத்தை, உணர்ச்சியை தன் பால் இழுத்தது. அதற்குமேல் தாங்கமுடியாது போல் மனம் பொருமியவாறே அவள் பாதங்களைச் சட்டென்று ஸ்பரிசித்தது அவ்வடிவம்! அவ்வுணர்ச்சி நாககன்னிகையின் உள்ளத்தைத் தொட்டது. 'ஆ!' என்ற கூக்குரல்; தூக்கி எறியப்பட்டவள்போல் பதறி எழுந்தாள். அவள் இருதயம் விம்மியது. துணுக்குற்ருள்; எதிரில் நிற்கும் வடிவத்தைக் கண்டு! அவ்வடிவத்தை உற்று நோக்கினுள். சட்டென்று அறிந்துகொண்டாள். ஆம்; அதே வடிவம்! அவ்வடிவம் வேறு யாரும் அல்ல; சோழவேந்தன் நெடுமுடிக்கிள்ளியே அவ்வடிவம். ஒரு கணம் அவள் உடல் சிலிர்த்து, வியர்த்தது. கண்கள் சுழன்றன. ''நீங்கள்......'' என்று கூறுமளவில் அவள் குரல் கம்மியது. அதற்குமேல் அவளிடமிருந்து வார்த்தைகள் வெளிவரவில்லை.

இருவர்
கூடிய அமைதி

நெடுமுடிக்கிள்ளி மெல்ல அவளை அணுகினுன். அவள் நிலைசோர்ந்தாள். மூழுமதியின் இன்பக் கிரணங்களால் அலைகடல் கொந்தளிப்பதுபோல்,

கிள்ளியின் கர ஸ்பரிசத்தால் அவள் உள்ளம் உணர்ச்சி மேலிட்டு அலைமோதியது. கிள்ளியின் அணைப்பைத் தவிர்க்க முடியாதவளாய்த் தன் வசமிழந்தாள். நாணத்தால் தன் முகத்தை அவன் மார்பகத்தே மறைத்துக்கொண்டாள். வாய் திறந்து இருவரும் வார்த்தையாடவில்லை. அவள் அவனுக்கு உரிமையானாள். முன்புபோல், அந்தக் குடிலில் அமைதி நிலவியது ஆனால், இருவர் கூடிய அமைதி.

அதே சமயம்! அமைதிக்குமுன் அவள் குரல் கொடுத்த சமயம்-அடுத்த குடிலில் சிந்தனை மிகுந்து உறக்கமின்றித் தவித்திருந்த நீலன் உள்ளம் துணுக்குற்றான். 'நாககன்னிகையின் குரல் போலிருக்கிறதே! ஏன் இந்தக் கூக்குரல்' என்று பரபரப்புடன் வெளி வந்தான். ஆனால்,—எங்கும் அமைதி!

குடிலை விட்டு வெளி வந்தவன் நாககன்னிகையின் குடிலுக்கு வெளியே சிறிது நின்றான். அதே அமைதி! 'என்ன? வீண் பிரமையா? நாககன்னிகையின் குரல் கேட்டது பொய்யா? என் மதி மயக்கமா? மிக அமைதியாக இருக்கிறதே!' என்று ஆலோசித்தான். 'ஏன், இவள் கனவில் பிதற்றியிருக்கலாம்! ஆனால் இவள் உறங்குகிறாளா என்று பார்ப்போம்' எனச் சிந்தித்துத் திரையைச் சிறிதே தள்ளி உள்ளே நோக்கினான்; அவன் கண்ட காட்சி!—

### மானத்தை அழிப்பது நீதியோ?

நீலன் மனம் பதறினான். சட்டென்று பின் நகர்ந்தான். உடல் நடுங்கியது அவனுக்கு. மெய்ம் மயிர் சிலிர்த்தது. கண்கள் புடைபெயர்ந்தன. கைகளைப் பிசைந்தான். இருதயம் பிளந்துவிடும் போல் பெருமூச்சுவிட்டான். மனப் பதற்றம் கோபமாக மாறியது. விரைந்து தன் குடிலுக்குள் சென்றான்; கையில் வேலை எடுத்துக்கொண்டு மீண்டும் வெளியே வந்தான். 'இதை நான் பொறுத்துக்கொள்ளேன். கிள்ளி, இவளை உரிமையாக்கிக் கொள்ளும்படி நான் விடேன்' என்று உறுதியுடன் நாககன்னிகையின் குடிலை அடைந்தான். கடு நடையுடன் அவன் செல்லும் அதிர்ச்சியிலேயே திடுக்குற்று கிள்ளியும் நாககன்னிகையும் வெளியே நோக்கினர். கையில் தாங்கிய வேலுடன் நீலன், திரையைச் சட்டென்று தள்ளி நிமிர்ந்து நின்றான்.

### அவள் உரிமையைக் குலைக்க அவன் யார்?

“நீ அரசனோ? மதி கெட்டவனே! ஒரு நாட்டிற்கு வேந்தனாகிய நீ ஒரு பேதை மங்கையை மனம் குலையச் செய்து மானத்தை அழிப்பது நீதியோ?...” என்ற கொடுஞ் சொற்களை அவன் வீசினான். கிள்ளி கோபத்துடன் எழுந்து நின்று அவனை நோக்கினான்; “அடே, நானும் ஓர் அரசன்; இவளும் ஓர் அரசிளங்குமரி. எங்கள் தொடர்பில் நீதிக்கு மாறுபாடு என்ன இருக்கிறது? நீ மனம் பதறி வீண் வார்த்தைகளைக் கூறாதே!” என்று துணிவுடன் கூறினான். “என் அநுமதியின்றி இவளை அணுக யாருக்கும் உரிமையில்லை மீறுபவனுக்கு இதோ தண்டனை...” என்றவாறே வேலை உயர்த்திக் கிள்ளி மீது எறிய முன் வந்தான் நீலன்; துணுக்குற்று மனம் பதறி, எழுந்து தாவி வேலைப் பிடித்தாள் நாககன்னிகை. அவளால் உயிர் தப்பியது கிள்ளிக்கு. அவள் துணிவு கண்டு கிள்ளி பிரமிப்புற்றான். அவன் கோபம் எல்லை மீறியது. அது காணும் வாய் பேசாதிருந்த அவள் சினந்து, “நீலா, விலகி நில்; என்னை அடக்குவதற்கு உனக்கு உரிமையில்லை. நான் இவரைக் காதலிக்கிறேன். இவர் என்னைக் காதலிக்கிறார்! அரச குலத்திற் பிறந்த எங்களுக்கு இறைவன் அருள் செய்தான். உன் பதற்றத்தை அடக்கித் திரும்பிச் செல்; இனி இவரை நீ பகைத்தால், என் உயிருக்கு நீ யமன் என்றே நான் எண்ணுவேன்” என்றாள். அவள் சொற்கள் நீலனைத் திகைக்கச்செய்தன. நாககன்னிகையின் வார்த்தைகளுக்கு அடங்கித் தலை குனிந்தவாறே குடிலைவிட்டு வெளியேறினான். தன் நினைவு பாழானதை எண்ணி அவன் மனம் உடைந்தான்; 'என்ன துணிவு அவளுக்கு எனக்கு உரிமையில்லை என்று சொல்ல?' என்று வியப்பும் ஏக்கமும் குடிகொண்டன அவன் உள்ளத்தில். அவள் துணிவை எண்ணியவாறே, அச்சத்துடன் தன் குடிலுக்குள் நீலன் புகுந்தான். மீண்டும் அதே அமைதி. நீலன் சிந்தனையில் ஆழ்ந்தான். அவள் உரிமையை—துணிவைக் குலைக்க அவன் யார்?

(தொடரும்)

# மாட்டுக்கார மருதன்: வ. ரா.

'நெல்லுக்காச்சிமரம்' என்று பலர் சொன்ன காலமும் உண்டு. நெல் எப்படி பயிர் ஆகிறது என்பதே தெரியாத அப்பாவிகள்! கிராம வாழ்க்கை இன்னது என்று தெரியாத அரண்மனை சிப்பந்திகள், பண்டைக் காலத்தில் 'நெல்லுக்காச்சி மரம்' என்பார்களாம். அவர்களுக்குச் சளைத்தவர்களல்ல, இப்பொழுது நகரத்தில் வசிப்பவர்கள்.

இவர்களுக்கு, கொட்டில், பண்ணை, மாட்டுக்காரன், கருக்காய், போரடி, பிரம்படித்தல், நாற்றங்கால், களை எடுத்தல் முதலியவைகள் என்ன என்பதே அநேகமாகத் தெரியாது என்று சொல்லி விடலாம். வயலை மடக்கி மடக்கி எத்தனை தடவை உழுதாய் என்று கேட்பதற்குப் பதிலாக, எத்தனை 'சால் ஓட்டினாய்' என்று கிராமத்தில் கேட்பார்கள் என்றும் இவர்களுக்குத் தெரியாது.

கொட்டில் என்றால் தொட்டில் என்பதைப் பிழையாகச் சொல்லுகிறார்கள் என்று இவர்கள் அழுத்திப் பேசவும் கூடும். மாட்டுக்காரன் என்றால் மாட்டுக்கு உடையவன் என்று தவறாக அர்த்தம் செய்துகொள்ளவும் செய்வார்கள். மாடு மேய்ப்பவனை மாட்டுக்காரன் என்றும் மாடுகள் தங்கும் இடத்துக்குக்கொட்டில் என்றும் கிராமத்தில் சொல்லுவார்கள் என நகரவாசிகளுக்கு இப்பொழுது கட்டாயம் தெரியபடுத்தித்தான் ஆகவேண்டும்.

மாட்டுக்கார மருதன் மாடு மேய்க்கும் மருதன் என்று இன்னமும் தெளிவுபடுத்த வேண்டுமா? மருதனுக்கு, இப்பொழுது வயது பதினான்கு இருக்கும். அவன் ஹரிஜன் என்று சொல்லத் தேவையில்லை. காய்கறிகளைக் கண்ணால் கண்டறியாத கூட்டத்தில் பிறந்த மருதனுக்கு நண்டு தான் பலகாலும் ஆகாரம். மைசூர்பாகும் ஹல்வாவும் அவனுக்குத் தெரியுமா? சர்க்கரைப் பண்டங்களை, கிழக்கோடி அளவுக்குமேல் அவனால் சாப்பிட முடியாது. அதற்குள், தித்திப்பு தெகட்டிப்போகும்.

உப்புப்பண்டங்களை அதுவும் கொஞ்சம் காரம் அதிகமாக இருந்தால், விடவே மாட்டான். 'அதற்காச்சு, எனக்காச்சு' என்று சொல்லிக்கொண்டே ஒரு கை பார்த்துவிடுவான். வலது கையில் ஒரு கவளச் சோறையும் இன்னொரு கையில் ஈர வெங்காயத்தையும் பச்சை மிளகாயையும் ஊறுகாய்களாக வைத்துக்கொண்டு, அவன் ருசியுடன் உண்பதைப் பார்த்து தேவர்கள் தான் புஷ்பமாரி பெய்யவேண்டும். நீராகாரத்தைக் கண்டால், மருதனுக்கு பிரம்மானந்தம்!

இரண்டாம் கோழி கூவினால் போதும்; மருதன் படுக்கையில் இருக்கமாட்டான். படுக்கை என்பது உபசார வார்த்தை. மருதனுக்கு படுக்கை ஏது? படுக்கை எதற்காக? உடல் வருந்தி உழைக்காதவர்களுக்கல்லவா, மெத்தையும் அடுக்கு அடுக்காக தலையணையும் வேண்டும்? மருதனுக்கு மெத்தை பூமிதான்; தலையணை, அவனது இடது கை. குளிர்ந்தால், போர்த்துக் கொள்ள துப்பட்டியும் போர்வையும் கிடையாது. அவனுடைய இடுப்பிலே இருக்கும் துண்டுதான், இதற்கு உபயோகப்பட வேண்டும்.

கோழி கூவினதும், அவன் கால்களை நீட்டிக் கொண்டு, படுத்துக் கொண்டிருக்கமாட்டான். எழுந்திருந்து உட்கார்ந்து கொண்டு, கண்களை சுத்தமாக துடைத்துக் கொண்டு, இடுப்பில் துண்டை கட்டிக் கொள்ளுவான். கிழிந்த கைக்குட்டை போன்ற ஒரு துணியை தலையில் கட்டிக் கொள்ளுவான். பக்கத்தில், கம்பு, இருக்கிறதா என்று ஆஜர் பார்ப்பான். பரமசிவம் என்று தன் வாய்க்குள்ளாகவே, ஒரு தரம் சொல்லிக் கொள்ளுவான்.

நன்றாக, நிலம் தெளிந்ததும், ஆண்டை வீட்டுக்குப் புறப்படுவான்கோல்சகிதமாக. "ஆத்தா! போய்த்து வாரேன்" என்று தாயாரிடம் சொல்லிக் கொள்ளுவான். வழியில் பராக்குப்

பார்க்கமாட்டான். நேரே, ஆண்டை வீட்டுப் புழக்கடைக்கு வருவான். புழக்கடையிலிருக்கும் மாட்டுக் கொட்டிலில் நுழைந்து, ஒவ்வொரு மாடாகத் தடவிக் கொடுப்பான். கோதாணியிலே வைக்கோல் இருக்கிறதா என்று கவனித்துப் பார்ப்பான். வைக்கோல் இல்லாமலிருந்தால்தான் சந்தோஷப்படுவான்.

எந்த மாட்டுக்கு முன்னே யாவது, கோதாணியில் வைக்கோல் இருப்பதைப் பார்த்தால், அவன் உடல் பதறிப்போவான். 'ஏ! வெள்ளைச்சி! (ஒரு பசுவுக்கு அவன் வைத்திருக்கும் பெயர்) நீ ஏன் சரியாக தீனி எடுக்கவில்லை? உனக்கு வயிற்றுப் பொறுமலா? இல்லாட்டி, உன் பக்கத்திலிருக்கிற கோணக் கொம்பன் (காளை மாட்டுக்குப் பெயர்) உன்னை தீனி தின்ன விடாமல், கொம்பை ஆட்டிக்கிட்டே இருந்தானு' என்று வெள்ளைச்சியோடு, அந்தரங்கம் பேசுவான்.

மாடுகளையெல்லாம் அவிழ்த்து, புண்ணுக்கு போட்டிருக்கும் தொட்டியில் தண்ணீர் காட்டுவான், 'ஏ! சாமி! மாடுவளை, மேச்சத் தரைக்கு ஓட்டிட்டுப் போறேன். போய்ட்டு வாரேனுங்க' என்று ஆண்டையின் வீட்டாருக்கு தெரியும்படியாக, உரக்கச் சொல்லி விட்டுப் போவான்.

காலையில், மேய்ச்சல் தரையில் முதன் முதலில், மருதன் தான் ஆஜராக இருப்பான். பட்டி மேய்ச்சலுக்கு ஆசைப்படும் மாடுகளுக்கு காலில் முட்டி போட்டுவிடுவான். மாடுகளைச் சிதறாமல் பார்த்துக் கொண்டு,

அரச மரத்துக்கிளி,
ஆசாரம் பேசும் கிளி
நான் வளத்த பச்சக்கிளி,
நாளை வரும் கச்சேரிக்கு
தில்லாத்தான் டாங்கு
ராசா தில்லாலே

என்று கானத்தில் வீழ்ந்து விடுவான்.

கொண்டித்தனம் செய்து கொண்டு, தானும் மேயாமல், மற்ற மாடுகளை மேயவிடாமல், 'லூட்டி' அடிக்கும் மாட்டுக்கு, கிட்டப் போய், புத்தி சொல்லுவான். 'ஏ! பாவி! ஏன் உனக்கு கெடு புத்தி! நல்ல வங்க வீட்டிலே வளர்ர நீ, மருதன் மேய்க்கிற மாடு நீ, நீகூட ஊர்ப் பயங்க மாடு மாலீ (மாதிரி) சேட்டை பண்றயே! புத்தியோடு இருந்தே, புளச்சே, இல்லேன்னு, நல்லா, உன்னை, நாலு வாங்கு வாங்கிடுவேன். புத்தியோடு புளே! முதுகுத்தோலை எரவல் கொடுத்துடாதே' என்பான்.

அது நல்ல தனமாக நடந்து கொண்டால், மருதன் சும்மா இருப்பான். இல்லாவிட்டால், 'அடியாத மாடு படியாது இன்னு உனக்காகத்தான் சுலவம் (சுலோகம்-பழமொழி) சொல்லுகிறுக' என்று அவன் பாஷைப் படிக்கு, 'நாலு வாங்கு வாங்கி' மாட்டின் முதுகுத்தோலை, 'ஏரவலாக'ச் செய்துவிடுவான்.

மாடுகளை, காலை மேய்ச்சல் ஆனதும், வீட்டுக்குத் திருப்பிக் கொண்டு 'வரும்பொழுது, தெருக் காடுகளில், ஏதாவது காயப் போட்டிருக்கிறார்களா அல்லது குழந்தைகள் விளையாடிக்கொண்டிருக்கிறார்களா என்பதை கவனித்துப் பார்த்து, மாடுகளை ஒரு பக்கமாக ஒதுக்கி ஓட்டிக்கொண்டு போவான்.

ஆண்டை வீட்டுக்கு மாடுகள் வந்ததும், அம்மா என்று பதட்டமில்லாமல், மிக்க மரியாதையோடு கூப்பிடுவான். மாடுகளை, அதன் அதன் இடத்தில் கட்டிக் 'கோதாணியில் நிறைய வைக்கோலை அடைத்து விட்டு,' மீண்டும் அம்மா என்று குரல் கொடுப்பான். இரண்டாவது அம்மாவுக்கு, சன்மானமாக, அவனுக்கு அரிசி நொய் கிடைக்கும். அதை வாயில் போட்டு மென்றுகொண்டே வீட்டுக்குப் போவான்.

வீட்டிலே, தாயார் இருக்க மாட்டாள். அவளும் வீட்டுக்கு வெளியே வேலைக்குச் சென்ருலொழிய, அவர்களுடைய குடும்பத்தின் ஜீவனம் நடக்க வழியில்லை. ஐந்தாறு குழந்தைகள்! அவர்களிலே, மருதன் தான் மூத்தவன். அவனுடைய பங்கு ஆகாரம், சட்டியிலே வைத்து மூடப்பட்டிருக்கும். அது சாப்பிடக்கூடிய ஆகாரமாய் இராது; குடிக்கக்கூடியதாக இருக்கும். அதாவது நீர் ஆகாரம். ஆறு குழந்தைகளின் நடுவே, அவ்வளவு தானே கிடைக்கும்!

மருதன் சேரிச் சாவடியில்—சாவடி, பாதிக்கூரை போன இடம் - படுத்துக் கொண்டு, தனக்குத் தெரிந்த பாட்டுகளையெல்லாம், கண்காணுத கடவுளுக்கு முன், அரங்கேற்றுவான். சிறிது நேரம் அங்கேயே கண் அயர்வான்; அல்லது மற்ற பையன்களோடு விளையாடுவான். அல்லது வீட்டிலே தங்கைப் பாப்பா அழுதால், அதைத் தூக்கி வைத்துக் கொண்டு, விளையாட்டு காண்பிப்பான்.

பிற்பகலில் மணி இரண்டு அடிப்பது அவனுக்கு எப்படியோ தெரிந்துவிடும். மறுபடியும் மாடு அவிழ்க்கப்போய் விடுவான். இப்பவும் அம்மா என்ற குரல்தான். பிற்பகலில் வேறு மேய்ச்சல் தரை. சரியாக நான்குமணி அடிப்பதும், அவனை மாடுகளோடு ஆற்றில் பார்க்கலாம். மாடுகளை, சுத்தமாகத் தேய்த்து குளிப்பாட்டுவான்.

மயிலைக் காளையைத் தேய்க்கும்பொழுது, 'அடே! அசடே! உனக்கு எத்தனை நாள் புத்தி சொன்னுலும், உனக்குத் தெரிகிறதில்லை. ஊரான் கொல்லையிலே போய் வாய் வைக்காதேன்னு எத்தனைநாள் உனக்கு இடிச்சு இடிச்சுச் சொல்றது. அடப்பாவி! அவன், உன் முதுகுத் தோலிலே, பட்டை வாங்கிப்பிட்டானே! அவனைச் சொல்லி என்ன பண்றது? உனக்குன்னு ரோஷம் இருக்கணும்? ஊரான் கையாலே

அடி வாங்கறது அவமானம்னு உனக்குன்னு புத்தி இருக்கணும். இனிமே, பட்டி மேச்சல் மேயாதே' என்று தடவிக் கொடுத்துக்கொண்டே தேய்ப்பான்.

மருதனுடைய மான உபதேசம் மயிலைக்காளையின் காதில் விழப்போகிறதா?

தீபாவளியும் பொங்கலும் மருதனுக்கு, குதூகலமான நாட்கள். 'சாமி! இந்த வாட்டி தீவிளிக்கு, எனக்கு காந்தி வேட்டி எடுத்துக் குடுங்க, சாமி! ஏன் சாமி! மகா காந்தி (மகாத்மா காந்தி என்று மருதனுக்கு சொல்ல வராது) சயினிலேயா (ஜெயிலிலா)இருக்காக? நல்லவங்களைப், பெரியவங்களை, இப்படியெல்லாம் செய்யலாமுங்களா? நம்ம ராசாவுக்கு, மகா காந்தி சயினிலே இருக்காருன்னு தெரியாதுங்களோ' என்று சொல்லிக்கொண்டே போவான்.

பொங்கலுக்கு பத்து நாள் முன்னமேயே, மாடுகளுக்கெல்லாம், சல்லிகள் தயார்ப்பண்ணுவதில், மருதன் ஈடுபட்டிருப்பான். "சாமி! இந்த வாட்டி, நொம்ப (ரொம்ப) சல்லி பண்ணியிருக்கேனுங்க. கோணக்கொம்பனுக்கு, தாட்டு சல்லி, வெள்ளச்சிக்கு நெத்திப் பட்டை, மயிலைக் காளைக்கு கொம்புச் சல்லி, தாட்டுச் சல்லி, நெத்திப்பட்டை, காதுக்கு குஞ்சுச்சல்லி, எல்லாம் திரிச்சுருக்கேனுங்க. நம்ம மயிலைக் காளையை, இந்திரன் சந்திரன் வந்தாக்கூட பிடிக்க முடியாதுங்க. கொம்பாலே ஒரு குத்து குத்தி எரிஞ்சுடுங்க. சாமி! கொம்பிலே, புது வேட்டி கட்டி விட்டா, என்னுங்க" என்பான்.

பொங்கலுக்காக மருதனுக்கு கிடைப்பது ஒரு புதுப்பானை, இரண்டு படி அரிசி, மூன்று வெல்ல அச்சுகள், இரண்டு முழத்தில் ஒரு கரும்புத்துண்டு, ஒரு அணு காசு. இவைகளை மிக்க சந்தோஷத்துடன் வாங்கிக்கொண்டு, மருதன் ஆண்டையை கால் கும்பிடும் பொழுது, என் கண்களில் நீர் பெருகும்.

மகாத்மா மருதன் என்று என் வாய் தானாகவே சொல்லும்.

## சென்றவார நிகழ்ச்சிகள்

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

கொண்டுவந்த ஒத்திவைப்புத் தீர்மானம் 43 பேர் சாதகமாகவும் 39 பேர் பாதகமாகவும் வாக்களிக்க நிறைவேறியது.

* * * *

### காங்கிரஸ் இயக்கம்: சிறையில் 19,284 பேர்

1943 ஸெப்டம்பர் முதல் தேதியன்று காங்கிரஸ் இயக்கம் சம்பந்தமாக எல்லா மாகாணங்களிலும் கைதியாகி சிறைத் தண்டனையை அனுபவித்து வருபவர்களின் தொகை 19 ஆயிரத்து 284 என்று மத்ய சட்ட சபையின் கூட்டத்தில் ஸ்ரீ ஜோஷியின் கேள்விக்குப் பதில் அளிக்கையில் இந்திய சர்க்கார் உள் நாட்டு மெம்பர் கூறினர்.

காவலில் இருப்பவர்கள் 8073 பேர் என்றும் அவர் உரைத்தார்.

பாதுகாப்புக் கைதிகளில் 7447 பேர் விடுதலை செய்யப்பட்டிருப்பதாகவும் அவர் தெரிவித்தார்.

* * * * *

### அமராவதியில் உள்ள சென்னைக் காவல் கைதிகள்

இப்பொழுது மத்ய மாகாணத்தைச் சேர்ந்த அமராவதி ஜில்லா ஜெயிலில் இருந்து வரும் சென்னைக் காவல் கைதிகள் தங்களைச் சென்னைக்கு மாற்றும்படி கேட்டுக்கொண்டனர் அதற்கு இணங்க சென்னை சர்க்கார் மறுத்துவிட்டதாகத் தெரிகிறது.

* * * *

### 50 பேருக்குமேல் விருந்தளித்ததாக அபராதம்

பங்களூரில் கலெக்டர் உத்திரவை மீறி தமது குமாரியின் கல்யாணத்தையொட்டி, ஐம்பது பேருக்குமேல் விருந்தினரை அழைத்திருந்ததற்காக, ஸிவில் அண்டு மிலிடரி ஸ்டேஷனைச் சார்ந்த ஜனப் காஜா அப்துல் காதருக்கு விசேஷ முதலாவது வகுப்பு மாஜிஸ்திரேட் ரூ. 300 அபராதம் விதித்தார். தவறினல் இரண்டு மாத சிறைவாசம் அனுபவிக்க வேண்டும் என்றும் உத்தரவிடப்பட்டது.

# பத்திரிகையாசிரியர்களுக்கு வைஸ்ராய் நடத்திய தேக்கச்சேரி

சமீபத்தில் வைஸ்ராய் வேவல் பிரபு அகில இந்திய பத்திரிகை ஆசிரியர் மகாநாட்டு நிரந்தரக் கமிட்டிமெம்பர்களுக்குத் தமது மாளிகையில் ஓர் தேக்கச்சேரி நடத்தினார். "மித்திரன்" ஆசிரியர் ஸி. ஆர். ஸ்ரீநிவாஸன் லேடி வேவலுடன் சம்பாஷிக்கிறார். "மார்னிங் நியூஸ்" ஆசிரியர் ஜனாப் ஸித்திக் வலது புறத்தில் இருக்கிறார்.





பிரிண்டிஸியிலுள்ள நேசதேச நிருபர்களுக்கு ஜெர்மனிமீது இத்தாலி தொடுத்த யுத்தப்பிரகடனத்தை மார்ஷல் படாக்ளியோ படித்துக்காட்டுகிறார். (வலது) வங்காளத்தில் வேவல் பிரபு:— வங்கப் பஞ்ச நிலையைக் கண்கூடாகக் காணச்சென்றபோது வேவல் பிரபு உணவு விநியோகிக்கப்படும் ஓர் பகுதியையும் பார்வையிட்டார்.

Printed and Published by T. S. Visvanatha Iyer, B. A., at the "Swadesamitran" Power Press, Mount Road, Madras.—*Editor:* C. R. Srinivasan, B. A